# அருளுரை அறுநூறு



தொகுப்பு

K.J. இராமநாராயணன்

காஞ்சி காமகோடி பீடம்

ஸ்ரீபரமாச்சார்யாள்

ஸ்ரீஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின்

# அருளுரை அறுநூறு

*தொகுப்பாசிரியர்*

K.J. இராமநாராயணன்

ஸ்ரீராமஜெயம் வெளியீடு

## இந்நூல் கிடைக்கும் இடங்கள்

1. ''ஆரோமிரா''
74, காமராஜர் நகர், ஆல்பேட்டை
கடலூர் – 607 001 தொ.பே. (04142) 332095

2. வள்ளலார் கோட்டம்,
வாங்கல் சாலை,
கரூர் – 639 116 (தொ.பே. 0434–321692)

3. அமர்சேவா சங்கம்,
தென்காசி சாலை,
ஆயிக்குடி – 627852
நெல்லை மாவட்டம்.
தொ.பே.எண்கள். 04633–367160, 367170, 367317

4. "நாவல்"
மணக்குள விநாயகர் கோயில் வளாகம்,
13, லோரிஸ்தான வீதி,
பாண்டிச்சேரி – 1

5. K. சீனுவாசன்,
யூகோ வங்கி (Main Office)
பாண்டிச்சேரி – 1

6. P.S.L. ரவீந்திரன், (மகாத்மா காந்தி உயர்நிலைப்பப்பள்ளி)
27, சந்தான பஜனை கோயில் வீதி,
விழுப்புரம் – 605602 தொ.பே.04146–26106

7. இண்டியன் புக் சென்டர்,
கான்வெண்ட் தெரு,
புதுப்பாளையம், கடலூர் – 607 001
தொ.பே.04142:331780

8. மாணிக்கம், மாண்டிசோரி பள்ளி,
ஹவுஸிங் யூனிட், ராஜகோபாலபுரம்,
புதுக்கோட்டை – 3.

9. சென்னையில் கிடைக்குமிடம்
பவானி புக் சென்டர்
ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
சென்னை – 600 033.

## அன்பளிப்பு

தருபவர் | பெறுபவர்

............................................ ............................................

............................................ ............................................

............................................ ............................................

அன்புள்ள திரு/திருமதி அவர்களுக்கு,

இறையருளால் நலம் பலவும் விளைவதாக!

**"அருளுரை அறுநூறு"** என்ற இந்த நூலினைத்தங்களுக்கு அன்பளிப்பாக அளிப்பதில் பெரு மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைகிறேன்.

ஸ்ரீ காஞ்சி மாமுனிவரது அருள் வாக்குகள் தங்கள் வாழ்க்கைக்கு ஒளி ஊட்டி அதை அர்த்தமுள்ளதாக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அம்மகானது அறிவுரைகளை அனைவரிடமும் பரப்ப முயற்சி மேற்கொள்ளுங்கள். இது நாம் வாழும் இவ்வுலகை அமைதிப் பூங்காவாகவும் அருட்கூடமாகவும் மாற்றும் என்பது திண்ணம்.

ஸ்ரீ பரமாச்சார்யாளது பரிபூரண ஆசி தங்களுக்கும் தங்கள் குடும்பத்தினருக்கும் கிடைப்பதாக!

அன்பன்

## பொருள் அடக்கம்

உ

# நூன் முகம்

*தந்தை தாயாவானும் சார்கதியிங் காவானும்*
*அந்தமிலா இன்பநமக் காவானும்-எந்தமுயிர்*
*தானாகுவானும் சரணாகு வானும் அருட்*
*கோனாகு வானும் குரு*

– குரு வணக்கம்

உண்மையான குருவுக்கு இலக்கணம் கூறும் வகையில் அமைந்துள்ளதுதான் மேற்கண்ட செய்யுள். தந்தையாக, தாயாக, நாம் சார்ந்து நிற்கும் கதியாக, அருட்கோனாக இவ்வளவு தகுதியுடனும் ஒரு குரு இருக்க முடியுமா? அருட் பெரும்சோதியாகவும் தனிப் பெருங்கருணையாகவும் திகழ்ந்து நம் பிறவிப் பிணியை தீர்க்க வழிகாட்டிய உன்னதமான குரு, அற்புதமாமுனிவர் இருந்திருக்கிறாரா? பெறுதற்கரிய மனிதப் பிறவி கிடைத்தும் அதை எப்படி வாழ்ந்து முடிப்பது என்று மயங்கித் தயங்கி நிற்கின்றன கோடிக் கணக்கான மனிதஉயிர்கள். பிறவிப் பெருங்கடலில் தவித்து நிற்கும் இவர்களுக்கு ''உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம் உடம்பினில் உத்தமனைக் காண'' என்ற ஔவையின் குறளுக்கு ஏற்ப அத்வைதப் பேருண்மையை எடுத்துக் காட்டும் கலங்கரை விளக்கமாக நின்று 'அன்பும் சிவமும்' வேறில்லை எனக் காட்டி அந்த சிவத்திலேயே ஒன்றிணைந்து விட்டவர்தான் நமது ஞான குரு காஞ்சி காமகோடி பீடம் 67வது பீடம் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

எளிமை, உண்மை, தூய அன்பு, ஒழுக்க சீலம், பரம கருணை அத்தனைக்கும் உயிர் வடிவமாக இருந்து வாழ்ந்து காட்டிய ஞானசீலர் அவர். அம்மகானது ஒவ்வொரு சொல்லும் செயலும் நமக்கு உண்மை அறிவையும் உணர்வையும் ஊட்டுபவையாகத் திகழ்ந்தன. அந்த பரமாச்சார்யாள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர்களும் அப்பெருமானை நேரில் தரிசித்தவர்களும் அவர் தெய்வீக உரைகளைக் கேட்டவர்களும் பெறுதற்கரிய பெரும் பேறு பெற்றவர்கள். அப்பெரும் பேற்றைப் பெற்ற அடியவர்களில் இந்த எளியேனும் ஒருவன்.

அந்த ஞானசீலரை அருகில் நின்று தரிசித்து அப்பெருமானது அருட்பார்வை அடியேன் மேல் விழும் பாக்கியம் எனக்கு இருமுறை வாய்த்திருக்கின்றன. முதல் முறை நான் பள்ளிச்சிறுவனாக இருந்த

போது என் தாய்மாமன் அமரர் (விக்கிர பாண்டியம்) இராமையருடன் சென்னையில் தரிசித்தேன். மகாசுவாமிகள் அவரது பெயரைச் சொல்லி கூப்பிடும் அளவிற்கு என் மாமாவிற்கு மடத்துடன் தொடர்பு இருந்தது. நாங்கள் சென்ற அன்று சுவாமிகள் மௌன விரதமாக இருந்த நாள் என்று நினைக்கிறேன் என் மாமா சொல்வதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த அந்த மகானது அருட்பார்வை அடியேன் மேல் விழுந்தது. மாமாவின் பின்னால் கையைக் கட்டிக் கொண்டு நின்று கொண்டிருந்த என்னைப் பார்த்து, ''அவன் யார்?'' என்று பாவனையாக வினவினார். ''என் மருமான்!'' என்று என் மாமா பணிவாகக் கூறயவுடன் தன் திருக்கரங்களை உயர்த்தி ஆசிர்வதித்த காட்சி இன்னமும் என் மனதில் பசுமையாக இருக்கிறது. அன்று விவரமறியாத பருவம். இன்றுதான் அந்த பெறுதற்கரிய பேற்றை நினைத்துப் பூரிக்கிறேன்.

பல ஆண்டுகள் கழித்து என் மனைவி மற்றும் முதல் மகளுடன் (கைக் குழந்தை) திருப்பதி செல்லும் வழியில் காஞ்சீபுரம் சென்ற போது அந்த ஞானப் பெருங்கடலை எளிமையே உருவாக தேனம் பாக்கத்தில் சிறு குடில் ஒன்றில் தரிசிக்கும் வாய்ப்பு கிடைத்தது. ஏகாந்தமான தரிசனம். நாங்கள் நின்று கொண்டிருந்த இடத்திற்கு திடீரென எதிர்பாராமல் வந்து, தன் அருட்பார்வையை எங்கள் மேல் செலுத்திக் கொண்டே கடந்து சென்ற அந்த சில நிமிடங்களில் எனக்கு ஏற்பட்ட (அதுவரை அனுபவித்தறிந்திராத) சிலிர்ப்பும் ஆனந்தமும் எழுத்தில் வடிக்க முடியாதவை. இன்றும் நினைவில நிலைத்து நிற்பவை.

பிற்காலங்களில் அந்த ஞானசிரியனை காஞ்சியிலும் வேறு இடங்களிலும் தொலைவில் நின்று (வாழும் தென்முகக் கடவுளின் உருவாகவே உணர்ந்து) மேலும் சிலமுறைகள் தரிசித்திருக்கிறேன்.

பணியிலிருந்து ஓய்வு பெற்றதிலிருந்தே, அந்த நடமாடும் தெய்வம் திசை தெரியாமல் தத்தளிக்கும் மனித இனத்திற்கு அருளிய நற்செய்திகளை பத்திரிகைகள், புத்தகங்கள், பேட்டிகள், செய்தித் துணுக்குகள், ஒலிநாடாக்கள் போன்றவை மூலம் படிப்பதும் சேகரிப்பதுமான இருந்தேன்.

பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ணர் கூறுவார் ''கற்கண்டில் எந்த பாகத்தைக் கடித்தாலும் இனிக்கத்தானே செய்யும்?'' என்று. அதுபோல காஞ்சி மாமுனிவரின் எந்த சொல்லிலும் இனிமை, அருள், ஞானம், அன்பு, கருணை இவை தான் ததும்பி இருக்கும். அந்த மகானது எந்த ஒரு வார்த்தையும் வீண் வார்த்தை அல்ல. அனைத்தும் ஆழமான, அற்புதமான பொருள் பொதிந்தவை. பரம சத்தியமானவை. மனித குல மேம்பாட்டிற்கான செய்திகள் அடங்கியவை.

*''கைவிளக்கின் பின்னே போய்க் காண்பார் போல் மெய்ஞ்ஞான*
*மெய் விளக்கின் பின்னே போய் மெய் காண்பதெந்நாளோ?''*

என்று தாயுமான சுவாமிகள் பாடியருளியிருக்கிற ''மெய்ஞ்ஞான மெய் விளக்காகிய பரம கருணை நிறைந்தவராக விளங்கி சிவத்திலே கலந்து சிவமேயாகி நிற்கும் மகா பெரியவர் பின்னே போய் 'மெய்' காணும் ஒரு எளிய பணிதான் இந்த சிறிய முயற்சியாகிய ''அருளுரை அறுநூறு'' என்னும் இக்குறு நூல்.

*(சாதாரண வாசகர்களுக்கும் தெளிவாகப் புரிய வேண்டும் என்பதற்காக ஒரு சில இடங்களில் மட்டும் சில கடினமான அதிக வழக்கில் இல்லாத சமஸ்கிருதப் பதங்களை மட்டும் வழக்கில் உள்ள சாதாரண சொற்களாகக் கொடுத்திருக்கிறேன். இது நல்லெண்ணத்தில் செய்துள்ள ''அதிகப்பிரசங்கித்தனம்'' தான். இதற்காக மகாசுவாமிகளின் மன்னிப்பை மானசீகமாக வேண்டி நிற்கின்றேன்)*

அருளமுதக் கடலிலிருந்து (எனது சிற்றறிவுக்கு எட்டியவாறு) அறுநூறு முத்துக்களை மூழ்கியெடுத்து கோர்த்து ''அருளுரை அறுநூறு'' என்னும் மாலையாக, அமுதகலசமாக படைக்கும் அரிய வாய்ப்புக் கிடைத்திருப்பதும் அம்மாமுனிவரின் அருள்தான் என்பதும் முற்றிலும் உண்மை.

ஸ்ரீபரமாச்சார்யாளது அமுத வாக்குகளைக் கூர்ந்து கவனிக்கும் போது அம்மகான் மனித குலத்திற்கு விடுத்துச் சென்றுள்ள செய்திகள் பல இருப்பினும் முக்கிய கடமைகளாகச் சொல்லியிருப்பது ***''அன்பு'', ''எளிமை'', '' அடக்கம்'', ''ஒழுக்கம்'',''தொண்டு''*** ஆகியவைதான். இந்நூலை வெளியிடக் காரணமாகவும் உதவியாகவும் இருந்த பெருமக்களுக்கு இக்குணங்கள் வாய்த்திருப்பது மிகவும் பொருத்தமாக உள்ளது.

இவர்களில் முதல் இருவர் நெல்லை மாவட்டத்தில் ஆய்க்குடி என்னும் சிற்றூரில் அதிசயங்கள் நிகழ்த்தி வருபவர்கள் தங்களுக்கிருக்கும் மிக மிக மோசமான உடல் ஊனத்தையே சவாலாக எடுத்துக் கொண்டு, நூற்றுக் கணக்கான உடல் மற்றும் மூளை ஊனமுற்றோர்கள் நல்வாழ்விற்காக அயராது பாடுபட்டுவரும் அமர்சேவா சங்கத்தின் நிறுவனத் தலைவர் ***திரு. இராமகிருஷ்ணன் அவர்களும்*** அவருக்கு சிறிதும் சளைக்காத தொண்டாற்றிவரும் செயலர் ***திரு. சங்கரராமன் அவர்களும்*** இவர்களைப்பற்றியும் இச்சங்கத்தைப் பற்றியதுமான சிறு குறிப்பும் இந்நூலில் தனியே இடம் பெற்றுள்ளது.

மற்றொருவர் மறைந்த எனது மைத்துனரும் சிறந்த கல்வி யாளராக விளங்கியவருமான அமரர் சுவாமிநாதன் அவர்கள் (இவரைப் பற்றிய சிறு குறிப்பையும் இந்நூலில் காணலாம்).

அவரது நினைவாக இந்நூல் வெளிவர அன்னாரது மனைவி திருமதி R. சுப்புலட்சுமி, M.A.,M.Ed., அவர்கள் (ஓய்வு பெற்ற உயர்நிலைப்பள்ளி தலைமையாசிரியை), நிறைந்த பொருளுதவி செய்திருக்கிறார். அவருக்கு எனது மனப்பூர்வமான நன்றியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இது போன்று எனது நூல் வெளியீட்டு முயற்சிகளுக்கு என்றுமே நல்ல ஊக்கம் அளித்து வருபவர்கள் கரூர் வள்ளலார் கோட்டம் குருதேவர் மெட்ரிக் பள்ளி தளாளரும், மூத்த வழக்கறிஞருமான திரு. குமரன் அவர்களும் அவரது சன்மார்க்கக் குடும்பத்தினர்களும். அருட்பிரகாச வள்ளல் பெருமானது வழி நின்று ஆரவாரமில்லாத, அமைதியான கல்விப் பணி செய்து வருபவர்கள் அவர்கள் அவர்களுக்கு எனது நன்றி.

இந்நூலின் கைப்பிரதி எடுப்பதிலும் வேறு சில பணிகளிலும் எனக்குப் பேருதவி புரிந்து என் முயற்சிகளுக்கு உறுதுணையாக இருந்து வரும் எனது மனைவி திருமதி S. ஜெயலட்சுமி அவர்களுக்கும் இந்நூலின் முகப்புப்படம் மற்றும் வரைகலை ஆகியவற்றில் தனது நல்யோசனைகளை அளித்தும் அச்சுப்பிரதியைச் சரிபார்ப்பதிலும் உதவியும் செய்த என் மகன் திரு.இரா.சந்திரமௌலிக்கும் எனது பாராட்டுதல்கள்.

இந்நூல் வெளிவர மிக்க ஆர்வம் காட்டிய பலவகைகளில் உதவி புரிந்த என் உறவினரும் புதுவை யூகோ வங்கியில் பணியாற்றிவருபவருமான திரு K. சீனுவாசன் மற்றும் எனது அன்புமாணவரும் விழுப்புரம் காந்தி உயர்நிலைப்பள்ளி ஆசிரியருமான திரு P.S.L. ரவீந்திரனுக்கும் எனது நன்றிகள், வாழ்த்துக்கள்.

எனது நூல்களை எனது மனப்பாங்கின்படியே நன்கு வடிவமைத்து அழகாக அச்சிட்டு உரிய நேரத்தில் வெளிக் கொணருவதில் சென்னை இராயப்பேட்டை அலமு அச்சகத்தாருக்குப் பெரும் பங்கு உண்டு. இம்முறையும் அந்தப் பணியைச் செவ்வனே செய்து முடித்திருக்கும் அலமு அச்சக உரிமையாளரும் எனது இனிய நண்பருமான திரு. D. இராமநாதன் அவர்களுக்கு நன்றி.

முத்தாய்ப்பாகாக ஒரு செய்தி. வியாபார நோக்கத்துடன் விற்பனைக்காக வெளிவரும் நூல் அல்ல இது. இந்நூலில் குறிப்பிட்டுள்ள ஒரு சிறு நன்கொடைத் தொகை (அடக்கச் செலவிற்கும் குறைவானது) ஊனமுற்றோர் நல்வாழ்விற்காக அருந் தொண்டாற்றி வரும் ***ஆயிக்குடி அமர்சேவா சங்கத்தின்*** வளர்ச்சிப் பணிகளுக்காக அளிக்கப்படுகிறது. எனவே இந்நூலைக் கண்ணுறும் அன்பர்கள் இந்நூலை வாங்கி தங்கள் நண்பர்கள், உறவினர்களுக்குப் பரிசாக

வழங்குவதன் மூலம், இந்த எளிய முயற்சிக்கு உதவுவதோடு, ஒரு நல்ல தொண்டிற்கு தங்கள் சிறுபங்கை ஆற்றும் அதே நேரத்தில் ஸ்ரீஸ்ரீபரமாச்சார்யாளின் அருளுக்குப் பாத்திரமாகும்படியும் வேண்டிக் கொள்கிறேன்.

''உள்ளத்தால் பொய்யாது ஒழுகி'' உலகத்தார் உள்ளங்களில் எல்லாம் இறையம்சமாக விளங்கி வரும் ஸ்ரீகாஞ்சி மாமுனிவரது சிவஞான பொற்பாதங்களில்'' அவனருளால் அவன் தான் வணங்கும்'' பெரும் பேறாக எண்ணி இச்சிறு நூலை வணங்கிப் படைக்கின்றேன்.

*''நமச்சிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!*
*எல்லாவுயிர்களும் இன்புற்று வாழ்க!*

சித்திரபானு ஆண்டு
சித்திரைத்திங்கள் முதல் நாள்
(தமிழ்ப்புத்தாண்டு நாள்) 14.4.2002
74, காமராஜர் நகர்,
கடலூர் 607 001
தொலைபேசி (04142) 332095.

அன்புடன்,
**K.J. இராமநாராயணன்**

# அமர்சேவா சங்கம் - ஓர் அறிமுகம்



திரு. S. இராமகிருஷ்ணன்



திரு. S. சங்கரராமன்

*"பரோபகாரம் இதம் சரீரம்"* (பிறருக்கு உதவுவதற்கே இவ்வுடல்) என்பது ஆன்றோர் வாக்கு. இறைவன் நமக்கு இந்த கிடைத்தற்கரிய மானிடப்பிறப்பு அளித்ததற்கு என்ன காரணம் என்று உணர்ந்து கொள்ளாமல் தவிப்பவர்களின் கேள்விக்கெனவே பதிலாக அமைந்திருப்பது தான் இந்த வாக்கு. உலகத்தில் உள்ள அனைத்து உயிர்களின் தந்தை இறைவன். எனவே எல்லா உயிர்களும் நமது உடன்பிறப்புகளே. பிற உயிர்களின் நலனுக்கும் உயர்வுக்கும் நாம் உதவுகிறோமா இல்லையா என்பதை யோசித்துப் பார்க்கத்தான் இறைவன் சில உயிர்களுக்கு துன்பங்களையும் துயர்களையும், உடல் குறைகளையும், உண்டாக்கி நம்மை பரிட்சிக்கிறானோ என்று கூட நினைக்கத் தோன்றுகிறது.

உடல் ஊனம், உயர்ந்த இலட்சியங்களுக்கும் சாதனைகளுக்கும் தடைகளாக இருக்க அவசியமில்லை. மாறாக இக்குறைபாட்டையே ஒரு சவாலாக எடுத்துக்கொண்டு (உடல் குறை இல்லாதவர்களைக் கூட வெட்கப்படவைக்கும் வண்ணம்), உயர்ந்த தொண்டையும் சாதனைகளையும் நிகழ்த்திக் காட்ட முடியும் என்று நிருபித்துக் காட்டிவரும் அபூர்வமனிதர்களையும் (நமக்கு பாடமாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தினாலோ என்னவோ) இறைவன் படைத்திருக்கிறான் என்பதும் உண்மை.

இத்தகைய சாதனையாளர்களில் என்னைப் பெரிதும் கவர்ந்த ஒருவராக விளங்கக் கூடியவர்தான் ஆய்க்குடி (நெல்லை மாவட்டம்) அமர் சேவா சங்கத்தின் நிறுவனத்தலைவர் திரு இராம கிருஷ்ணன் அவர்கள். ''சமூகத்தால் (ஏன், சில நேரங்களில் அவரவர்

குடும்பத்தாராலேயே வெறுத்து ஒதுக்கப்படும்) உடல் ஊனமுற்றோருக்கு உதவிக்கரம் நீட்டி அவர்கள் மறுவாழ்விற்காக அல்லும் பகலும் பாடுபட்டு உன்னதமான தொண்டாற்ற வேண்டும். அதற்குத் தகுந்த விடாமுயற்சியும் மனதிடமும் உயர்ந்த குறிகோளும் உடைய ஒரு மனித நேயரைத் தயார் செய்ய வேண்டும்'' என்பது இறைவனின் திருவுள்ளம் போலும்! இல்லாவிடில் பொறியியல் கல்லூரியில் நான்காம் ஆண்டில் பயின்று வந்த துடிப்பும் செயல்வேகமும் நிறைந்த திரு. இராம கிருஷ்ணன் என்ற வாலிபரின் வாழ்வில் விதிவிளையாடி இருக்க வேண்டிய அவசியமில்லை.

ஒரு விபத்தில் ஒருகண நேரத்தில் தனது கழுத்திற்கு கீழ் இருந்த அனைத்து உடல்பகுதிகளிலும் உணர்வுகளை நிரந்தரமாக இழந்து விட நேரிட்ட அவரது வாழ்வின் புனித உன்னதமான அத்தியாயம் அந்த கணத்தில் தான் துவங்கியிருக்கிறது. இந்தக் கொடிய துயர்நிகழ்வும் அவரது மருத்துவ டாக்டர் அமர்ஜித்சிங் அவர்கள் அளித்த ஊக்கமும் இந்த அபூர்வ மனிதரின் வாழ்வில் புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. தன்னைப் போன்ற உடல் பாதிப்பு ஏற்பட்டுள்ளவர்களின் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாகவும், சுயசார்பு உள்ளதாகவும் ஆக்க வேண்டுமென்ற அவரது ஒரு இலட்சியத்தில் உதித்து அரும்பி தற்போது விரிந்து மணம் பரப்பும் மலராக ஆய்க்குடியில் அமைந்துள்ள நிறுவனம்தான் ***"அமர்சேவா சங்கம்"***. இச்சங்கம் அவரது சொந்த கிராமமாகிய ஆய்க்குடியில், அதுவும் குறிப்பாக உடல் ஊனமுற்றோர் ஆண்டான 1981ம் ஆண்டு உதயமானது கூட இறைவன் திருவுள்ளப் பாங்காகத்தான் இருக்க வேண்டும்.

திரு இராமகிருஷ்ணனை தலைவராகக் கொண்டு அமர்சேவா சங்கம் உடல் ஊனமுற்றோர்களுக்காக செய்துள்ள உதவிகளும் சாதனைகளும் மலைப்பைத் தருகின்றன (இறையருளால்) எவ்வித உடல்குறைகளும் இல்லாமல் உள்ளவர்களைத் கூட திகைக்கவும், வெட்கப்படவும் வைக்கின்றன. உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்காக இச்சங்கம் மழலையர் வகுப்பு முதல் 8ம் வகுப்புவரை இலவச பள்ளிகளை நடத்திவருகிறது. சுற்றுவட்டாரத்தில் உள்ள 330 கிராமங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கு இப்பள்ளிகளில் ஒருங்கிணைந்த கல்விபுகட்டப் படுகிறது. இவர்களுக்கு இலவச இருப்பிடம், உணவு, உடை, கல்வி ஆகியவை அளிக்கப்படுகின்றன. அதோடு செயற்கை கால்கள், ஊன்று கோல்கள், சக்கர நாற்காலி ஆகியவைகளும் உரிய உடலுறுப்பு பயிற்சிகளும், மருந்துகளும் கூட முற்றிலும் இலவசமாக அளிக்கப் படுகின்றன. தங்கள் உடல்குறைகளை எண்ணி மனதிடத்தை இழக்கக்கூடாது என்பதற்காக உடல் ஊனம் ஏதுமில்லாத சாதாரண

மாணவர்களுடனேயே ஒருங்கிணைந்த கல்வி அளிக்கப்பட்டு வருகிறது பாராட்டப்படவேண்டிய அம்சமாகும்.

இது மற்ற மாணவர்களிடையே தன் உடன்பயிலும் மாணவசகோதரர்களுக்கு ஊனமற்ற தங்களால் இயன்ற உதவிகளைச் செய்ய வேண்டும் என்ற உணர்வையும் சேவை மனப்பான்மையையும் இளம் வயதிலேயே உருவாக்கவும் உதவிபுரிகிறது.

பிறக்கும் போதே குழந்தைகளுக்கு உடல்குறை இல்லாத வண்ணம் தடுப்பதற்கும், பிறந்த குழந்தைகளுக்கு ஏற்படும் உடற்குறைபாடுகளை ஆரம்பகட்டத்திலேயே கண்டுபிடித்து உரிய சிகிச்சை அளிப்பதற்கும், உள்ளூர் ஆரம்ப சுகாதார நிலையத்தில் உள்ள தாதியர்களுக்கும் பிரத்தியேகப் பயிற்சியும் அளிக்கிறது இச்சங்கம்.

அதோடு மனவளர்ச்சி குன்றிய மூளை பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்காக (அவர்களது பெற்றோர்களுக்கு உதவும் வண்ணம்), பகல் நேர பாதுகாப்புமையம் சங்கத்திலேயும் அருகில் உள்ள எலத்தூர் கிராமத்திலும் இயங்கி வருகிறது.

தங்களை சுயச்சார்பு உள்ளவர்களாக ஆக்கி கொள்ள வேண்டும் என்ற உன்னத நோக்கத்துடன் இந்தியா முழுவதிலிருந்தும் உடல் ஊனமுற்ற இளைஞர்களுக்கு 'ஸ்புரிலின' என்ற பச்சைப்பாசி தயாரித்தல், புத்தகம் கட்டுதல் (Book binding) குறிப்புப் புத்தகம் (Note Book) தயாரித்தல், இரண்டு சக்கர வாகனங்கள் பழுதுபார்த்தல் (சக்கர நாற்காலி தயாரிப்பின் தொழில் நுட்பம்) கைவினைப் பொருட்கள் தயாரித்தல், தையல் வேலை, Fibre Glass பூஜாடிசெடிகள் செய்தல், தட்டச்சு போன்ற துறைகளில் நல்ல பயிற்சி அளிக்கப்படுகிறது. அதோடு வளர்ந்து வரும் கணினி (Computer) யுகத்திற்கு ஈடுகொடுக்கும் வண்ணம் கணினி மையமும் இங்கே இயங்கி வருகிறது. இது இந்திரா காந்தி திறந்தவெளிப் பல்கலைக் கழகத்தால் ஒருகல்வி மையமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இந்த மையத்தில் B.C.A மற்றும் M.C.A போன்ற உயர்ந்தபட்டப்படிப்புகளுக்கும் (குறிப்பாக உடல் ஊனமுற்றோர்கள்), மிகக்குறைந்த கட்டணத்தில் பயிற்றுவிக்கப்படுகின்றனர். இதுமட்டுமல்ல. உலகத்தரத்துக்கு நிகரான அளவில் வல்லுநர்கள் மேற்பார்வையில் உடல் ஊனமுற்றோர்களுக்கான Physiotheraphy, Occupational theraphy ஆகிய உடற்கூறு மற்றும் மனவளர்ச்சி பயிற்சிகள் முற்றிலும் இலவசமாக வழங்கப்படுகின்றன.

இம்மாபெரும் சாதனைகளைச் செய்துவரும் 28 ஏக்கர் அளவில் பரந்து இருக்கும் இந்த அமர்சேவா சங்கத்தின் மற்றொரு தூணாக விளங்குவர் செயலர் திரு சங்கரராமன் அவர்கள். தீவிரமான உடற்குறை நோயொன்றினால் பாதிக்கப்பட்டுள்ள அவர் தனது வருமானம் மிகுந்த

ஆடிட்டர் தொழிலை துறந்து விட்டு தனது திரண்ட அறிவுச் செல்வத்தையும் இச்சங்கத்திற்கு வழங்கி தன்னை இத்தொண்டில் இணைத்துக் கொண்டவர்.

ராம இலட்சுமணர்களைப் போல். இணைந்து பணியாற்றிவரும் திரு இராமகிருஷ்ணனும், திரு. சங்கரராமனும் (இருவர்பெயரிலும் ராமன் அமைந்திருப்பதும் ஒரு சிறப்புதான்) தங்கள் இணையற்ற சேவையால் நெல்லை மாவட்டத்தின் ஒரு மூலையில் ஒளிந்து கொண்டிருந்த சிறு கிராமமாகிய ஆய்க்குடியை உலகஅளவில் உணரும்படி செய்திருக்கிறார்கள். உன்னத சேவைக்காக திரு. இராம கிருஷ்ணனுக்கும் திரு. சங்கர ராமனுக்கும் இந்தியாவின் தலைசிறந்தத்து இளைஞர்களில் ஒருவராக முறையே 1986லும், 1996லும் தேர்ந்தெடுக்கப்பட்டு வழங்கப்பட்ட விருதும் மற்றெரு உயர்ந்த விருதான ''பாட்டியா'' கவிருதும் (Bhatia award) உண்மையாகவே உரியவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளதால் இவ்விருவிருதுகளும் தங்களுக்குப் பெருமை தேடிக் கொண்டுள்ளன.

''சேவை'' என்ற சொல்லிற்கே பெருமை சேர்க்கும் இவர்கள் இயற்றிவரும் புனித வேள்வியில் தங்களை இணைத்துக் கொண்டு எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் வேறு பல சேவைச் செம்மல்களும் இச்சங்கத்தில் பணியாற்றி வருகின்றனர். இவர்களைப்பற்றிய விவரங்கள் அமர்சேவாசங்கத்தைப்பற்றி நான் எழுத இருக்கும் புத்தகத்தில் விவரமாக அளிக்க விரும்புகிறேன்.

இந்த ஆபூர்வ இரட்டையர்களின் வாழ்க்கைத்துணைவியர்களாக விளங்கும் திருமதி. சித்ரா ராமகிருஷ்ணன், மற்றும் புஷ்பா சங்கரராமன் இருவரும் இவர்களுக்கு உறுதுணையான''சக்தி'' களாக விளங்குகின்றனர்.

அமர் சேவா சங்கத்தில் உடல் ஊனமுற்ற மற்றும் சாதாரண குழந்தைகளுக்காக ஒருங்கிணைத்து நடத்தப் பெறும் சிவசரஸ்வதி உயர்துவக்கப்பள்ளி ஆசிரியர்களுக்கு சில நாட்கள் ஆங்கில மொழி பயிற்சி அளிக்கும் பணி எனக்கு கிடைத்ததை ஒரு பேறாகக் கருதுகிறேன். ராமர் கட்டிய அணைக்கு அணில் ஆற்றிய சிறிய சேவையைப் போல அமைந்த சம்பவம் இது. இதன் மூலம் திரு. இராம கிருஷ்ணனுடனும் சில நாட்கள் கலந்து பழகும் கிடைத்ததற்கரிய வாய்ப்பு கிடைத்தமைக்கு நான் பெருமைப்படுகிறேன்.

அமர்சேவா சங்கம் தன் சேவையை நன்கு ஆற்ற பெரிதும் நன்கொடைகளையே நம்பி இருக்கிறது. இந்த சேவை அமைப்பிற்கு அளிக்கும் ஒவ்வொரு ரூபாயும் ஆதரவற்ற சமூகத்தால் புறக்கணிக்கப் பட்டுள்ள நூற்றுக்கணக்கான உடல் ஊனமுற்றோர்களின் நல்வாழ்க்கைக்காக பயன்படுத்தப் படுகிறது. நன்கொடை அளித்த

திருப்தியையும், பெருமையையும் அடைய இதைக் காட்டிலும் தகுதியான அமைப்பு ஏதும் இருப்பதாகத் தோன்றவில்லை.

இச்சங்கத்தின் அரும் பெரும் சேவைகளைப் பாராட்டி உலகத்தொண்டு அமைப்புகள் பலவும் பல உபகரணங்களை இலவசமாக அளித்துள்ளன. கட்டிடங்கள் அனைத்தும் அன்பர்கள் நன்கொடையால் எழும்பியவை. ஜெர்மணியைச் சேர்ந்த திருஜெரார்டு தம்பதிகளின் கொடைகள் குறிப்பிடத் தக்கவை.

இத்தொண்டு நிறுவனத்திற்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு பல்வேறு பிரிவுகளின்படி வருமானவரி சலுகைகளும் விலக்குகளும் உண்டு. விவரங்கள் அமர்சேவா சங்கத்தின் website (www.amar.seva.org)ல் கிடைக்கும் அல்லது சங்கத்திற்கே நேரில் எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

சிவமேயாகி நிற்கும் காஞ்சி பரமாச்சார்யாள் (மகா பெரியவர்) ''சேவை'' என்ற சொல்லுக்கு வகுத்திருக்கும் இலக்கணத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்கும் திரு.இராமகிருஷ்ணன் அவர்களுக்கு அம்மகானது அருளுரைகள் அடங்கிய இப்புத்தகத்தை சமர்ப்பணம் செய்வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்.

திரு. இராமகிருஷ்ணன், திரு. சங்கரராமன் இருவரும் தொண்டு மனப்பான்மை உள்ள பல்வேறு வல்லுநர்களையும் தங்கள் நலத்திட்டங்களில் பங்கு கொள்ளவும் தொழில் நுணுக்க அறிவையும் அனுபவத்தையும் பகிர்ந்து கொண்டு உதவவும் அன்பு அழைப்பு விடுக்கிறார்கள். தங்கள் சேவையில் பங்கு கொள்ளுமாறும் தொண்டு உள்ளங்களுக்கு விண்ணப்பம் செய்கிறார்கள். இதுபற்றிய விவரங்களை கீழ்க்கண்ட முகவரியில் நேரிலோ, அஞ்சல், மற்றும் தொலைபேசி மூலமோ எந்த நேரமும் தொடர்பு கொண்டு பெற்றுக் கொள்ளலாம்.

முகவரி
தலைவர் / செயலர், அமர் சேவா சங்கம்
சுலோச்சனா கார்டன்ஸ்
தென்காசி சாலை, **ஆய்க்குடி** - 627 852
திருநெல்வேலி மாவட்டம்
தொலைபேசி எண் (STD 04633) 367160, 367170
Email. amarseva@vsnl.com. Visit website www.amarseva.org.

வாழ்க திரு இராமகிருஷ்ணன் மற்றும் திரு.சங்கரராமன் அவர்களது தொண்டு! வளர்க அமர்சேவா சங்கம்!

சித்ரபானு வருஷம்
சித்திரை முதல் நாள் (14.4.2002)
''ஆரோமிரா'', 74, காமராஜர் நகர்,
ஆல்பேட்டை, **கடலூர்** 607 001
தொலைபேசி (04142)332095

அன்புடன்
**K.J. இராமநாராயணன்**

# அமரர் S. சுவாமிநாதன் வாழ்க்கைக் குறிப்பு



**திரு S. சுவாமிநாதன்,**
***(9.1.1939–22.2.1996)***

திரு S. சுவாமிநாதன், திரு S. சுப்ரமணியஅய்யர், திருமதி மீனாட்சி அம்மாள் தம்பதியினருக்கு 9.1.1939 அன்று புதுக்கோட்டையில் பிறந்தார். சிறு வயதிலிருந்தே படிப்பில் ஆர்வமும் திறமையும் உள்ளவராக விளங்கிய அவர் புதுக்கோட்டை மகாராஜா கல்லூரியில் பட்டப்படிப்பை முடித்ததும் ஆசிரியப் பணியை தனது தொழிலாக தெரிவு செய்து கொண்டார். ஆசிரியப் பட்டப் படிப்பை முடித்துக் கொண்ட அவர் சிறிது காலம் புதுக்கோட்டை உயர்துவக்கப்பள்ளி ஒன்றில் தலைமை ஆசிரியராக பணியாற்றிய பிறகு 1960ம் ஆண்டு அரசுப் பணியில் சேர்ந்தார்.

பல்வேறு பள்ளிகளில் ஆசிரியப் பணியை சிறப்பாக பணிஆற்றிய அவர் 1965ம் ஆண்டு தலைமை ஆசிரியராக பதவிஉயர்வு பெற்றார். 1990 ஆண்டு வரை 25 ஆண்டுகள் பல்வேறு பள்ளிகளில் தலைமை ஆசிரியராக பணியாற்றி தனது கடும் உழைப்பு மற்றும் மாணவர்கள் மீது கொண்ட தனி கவனம் இவற்றால் அனைவராலும் பாராட்டப் பெற்றார்.

மாயனூர் ஆசிரியப்பயிற்சி நிறுவனத்தில் இரு ஆண்டுகள் விரிவுரையாளராக பணியாற்றிய அவர் 1992ம் ஆண்டு மாவட்ட கல்வி அதிகாரி பணி உயர்வு பெற்றார். திருப்பத்தூர், லால்குடி ஆகிய இடங்களில் மாவட்ட கல்வி அதிகாரி ஆகவும் சென்னை திருச்சி ஆகிய இடங்களில் மாவட்ட வயது வந்தோர் கல்வி அலுவலராகவும் பணியாற்றிய அவர் தனது சிறப்பான பணியின் காரணமாக உதவி இயக்குநராக பதவி உயர்வு பெற்றார். திருச்சி ஸ்ராமிக் வித்யாபீடத்தின் இயக்குநராக 1994ம் ஆண்டு பதவியேற்றார்.

இதனிடையே தனது கல்வித் தகுதிகளைப் பெரிதும் மேம்படுத்திக் கொண்ட அவர் M.A., M.Ed., M.Phil., ஆகிய பட்டங்களை உயர் தகுதியில் பெற்றார்.

தான் பணியாற்றிய நிறுவனங்களின் நலனை பெரிதாக நினைத்தும் அங்கு பயிலும் மாணவர்கள் நலனையே முக்கியமாகக் கருதியும் இரவு பகலாகப் பணியாற்றிய அவர் தனது உடல்நலனைக் கூட சரியாகக் கவனியாமல் இருந்ததால் அவர் உடல்நிலை சீர் கெடத் துவங்கியது. நோய் தீவிர மடைந்த காலத்திலும் தனது பணியையே முதன்மையாக கருதி உழைத்த காரணத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டு சிறந்த சிகிச்சையை மேற்கொண்டும் பலன் ஏதுமில்லாமல் பணியில் இருக்கும்போதே 22.2.1996 அன்று காலமானார்.

தனது வாழ்நாளில் தான் பணியாற்றிய கல்வி நிறுவனங்களுக்காக தன்னை ஒன்றித்து பணி செய்த அவர் தனது சொந்த செலவிலேயே அவற்றில் பல வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார். மாணவர்கள் நலனுக்காக பள்ளியிலேயே தங்கி வகுப்புகள் நடத்தி அயராது பாடுபட்டிருக்கிறார். மாணவர்கள் உள்ளங்களில் நீங்காத இடம் பெற்றார். நிர்வாகப் பதவிகளில் பணியாற்றினாலும் மாணவர்களுக்கு கற்பிக்கும் பணியையே அவர் பெரிதும் விரும்பினார்.

திரு ந. சுவாமிநாதன் சிறந்த கல்வியாளர். கல்விசிந்தனையாளர். புதிய உத்திகளைப் புகுத்தி கற்பித்தலை இனிமையாகவும் எளிதாகவும் ஆக்கியவர். மிகவும் எளிமையானவர். உயர் பதவி வகித்தும் பழகுவதற்கு எளிமையானவர். ஆங்கிலத்தில் சிறந்த புலமையும், கவிதைகள் புனையும் ஆற்றலும் உடையவர். தன்னலம் கருதாது உழைத்தவர். அவரது மறைவு கல்வித்துறைக்கு ஒரு இழப்பு என்பது உண்மை. தனது ஓய்வுக்குப் பிறகு கல்வித் துறையில் பல தொண்டுகள் செய்ய உத்தேசித்திருந்தார். ஆனால் இறைவன் சித்தம் வேறாக இருந்திருக்கிறது!

தனது குடும்பத்திலும் திரு. சுவாமிநாதன், அவரது சகோதரிகள், மனைவி, வயது முதிர்ந்த தாய் தந்தையர் ஆகியோர் பால் மிகுந்த பாசத்துடன் ஆதரவோடும் அனைவருக்கும் தன் கடமைகளை கடைசிவரை செவ்வனே ஆற்றிவந்தார். சிறந்த மகன், கணவர், சகோதரர் என்ற மூவகைச் சிறப்புகளோடும் வாழ்ந்து காட்டியவர்.

திரு. S. சுவாமிநாதனின் வாழ்க்கை துணைவியார் திருமதி R. சுப்புலெக்ஷ்மியும் அரசு கல்வித்துறையில் ஆசிரியையாகவும், தலைமை ஆசிரியையாகவும் இருந்து ஓய்வுபெற்றவர். தனது கணவர் விரும்பிய தன்னார்வ இலவச கல்வித் தொண்டு செய்து வருவதோடு கல்வி கூடங்களுக்கு கணிசமான நன்கொடை தந்து வருகிறார்.

இந்நூலை வெளிக்கொணர்வதாகத் தெரிந்தவுடன் இதன் பதிப்புக்கு பொருளுதவி செய்வதாக தானாகவே முன்வந்து செய்திருக்கிறார். அவருக்கு எனது நன்றியை தெரிவித்துக் கொள்வதோடு பரமாச்சார்யாளின் அநுக்கிரகம் கிடைக்கப் பிரார்த்திக்கிறேன். அவரது தன்னார்வத் தோண்டு தொடர எனது வாழ்த்துக்கள்

அமரர் S. சுவாமிநாதன் நினைவாக இந்நூலை வெளியிடுவதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்.

**K.J. இராமநாராயணன்**



# இறையும் மறையும்

1. ஆலயவழிபாடே முக்கியமாக ஒருமத சமூகத்தினரிடம் மதத்தை காத்துக் கொடுப்பதாக இருக்கிறது. சமூகத்தினரை மதத்தால் காத்துக் கொடுப்பதும் முக்கியமாக ஆலயவழிபாடுதான்.

2. சின்னவயதிலிருந்தே தினமும் ஐந்து நிமிடங்களாவது தனிமையில் உட்கார்ந்து இறைவனை நினைக்கவேண்டும். ''ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது''. எனவே இப்போதே இந்த நல்ல பழக்கத்தை ஆரம்பித்துவிட வேண்டும்.

3. நம் அப்பாவையும் அம்மாவையும் இறைவனாக நினைக்க வேண்டும். இதையே மாற்றி இறைவனையும், இறைவியையும் அப்பா, அம்மா என்ற உருவகங்களில் நினைக்க வேண்டும்.

4. இறைவன் எல்லா இடங்களிலும் இருக்கிறார் என்றால் அவருக்கு நம்மைப்போல் உருவம் இருக்க முடியாது. ஆனால் உருவம் இல்லாத ஒருவரை எப்படி நினைப்பது? அதனால் அவரை அப்பா, அம்மா என்ற இரு உருவங்களில் நினைக்க வேண்டும்.

5. சின்னவயதிலிருந்தே இறைவனை பிடித்துக் கொள்ள வேண்டும். அப்போது தான் அவரைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளவும் முடியும். வயது ஆக ஆக வேறு பல ஆசைகள் எல்லாம் வந்து இறைவனை நினைக்க வொட்டாமல் இடைஞ்சல் செய்யும்

6. பாப சிந்தனைகளைப் போக்குகிற புண்ணிய சிந்தனைதான் பரோபகாரம், சேவை மனப்பான்மை, தியாகம் எல்லாம். பொதுவாக அன்பு என்று சொல்லலாம். இந்த அன்பை பிரபஞ்சத்திற்கு மூலமான பரமாத்மாவிடம் திருப்பி விடுவதுதான் பக்தி

7. முன்வினை சமாசாரம் எப்படிப் போனாலும் இனி மேலாவது கர்ம பாரம் ஏறாமல் பார்த்துக் கொள்வதே முக்கியம். பழையதற்குப் பரிகாரம் தேடுவதைவிட புதிய சுமை சேராமல், பாபம் பண்ணாமல் வாழ்வதற்கு இறைவனைத் துணை கொள்வதே முக்கியம்.

8. மனது சுத்த மாவதற்காக, பழைய பாபகர்மங்களைத் தாங்கிக் கொள்வதற்காக, புதிய பாபம் செய்யாமலிருப்பதற்காக, எல்லோரும் முடிந்த மட்டும் தியானம் செய்ய வேண்டும். உறுதியான சங்கற்பம் இருந்தால் காலம் கிடைக்காமல் போகாது.

9. நம் இதயம் என்னும் குகைக்குள் நமக்குள்ளேயே ஒளிந்துகொண்டு நமக்கு வெளியே இத்தனை அற்புதங்களைச் செய்து நம்மை ஆச்சரியப்படுத்தித் தன்னைத் தேடவைக்கிறான் இறைவன் அப்படிஅவனைத் தேடுகிறது தான் பக்தி

10. உதவி பெற்றதற்கு நன்றி செலுத்துவது ஒருசிறந்த கடமை. ஒரு சிறு புல்லைக்கூட உண்டாக்கும் திறனற்ற மனிதனுக்கு இத்தனை உணவும் உடையும் மற்றும் உபகரணங்களும் வழங்கும் ஆண்டவனுக்கு நன்றி காட்டுவது நமது கடமை.

11. நமக்கு உணவு தருகிறவனுக்கு நல்லபடி திவேதனம் நடக்க வேண்டும். நமக்கு உடை தருபவனுக்கு நல்ல ஆடை இருக்க வேண்டும். இப்போது நம் ஊரில் யார் ரொம்ப அழுக்குத்துணி கட்டிக் கொண்டிருக்கிறார் என்று பார்த்தால் கோவிலில் உள்ள சுவாமிதான் எனத் தெரிகிறது!

12. நல்லவனாவதற்கு பக்தி தேவையில்லை என்று ஒருவாதம். ஆனாலும் நடைமுறையில் பலவிதமான சுயநல ஆசைகளால் ஆட்டிவைக்கப்படுகிற உயிரைப் பரிசுத்தப் படுவதற்கு பக்தியைப் போன்ற சாதனம் வேறு இல்லவே இல்லை.

13. ''பகவான் ஒருவன் சர்வசாட்சியாகவும், சர்வசக்தியாகவும் இருந்து கொண்டு நம் கர்மங்களுக்கு பலன் தருகிறான்'' என்ற பயபக்தி உணர்ச்சி தான் காலம் காலமாக மனிதனை தர்ம மார்க்கத்தில் நிறுத்துவதற்குப் பெரிய ஊன்று கோலாக இருந்து வந்திருக்கிறது.

14. எல்லா குணங்களும் உயிர்களும் உருவங்களும் எதனிடமிருந்து வந்ததோ, எது இதையெல்லாம் ஆட்டிப்படைத்து வைத்துக் கொண்டிருக்கிறதோ, அதையே எல்லா இனிய குணங்களைக் கொண்ட தெய்வரூபமாக அன்போடு நினைக்க நினைக்க, அந்த நல்ல குணங்கள் நமக்கு வரும்.

15. பக்தி செலுத்துவதற்கு முக்கியமானகாரணம்: அன்பு. அன்பு செலுத்தாமல் வாழ்ந்தால் அதில் ஆனந்தமே இல்லை. அன்பிலே உள்ள ஆனந்தம் வேறெதிலும் இல்லை என்று அனுபவத்தில் தெரிகிறது. (இறைவனிடத்தில் வைக்கும் அன்பே பக்தி)

16. நாம் யாரிடம் அன்பு வைத்தாலும் என்றோ ஒருநாள் நாம் அவரைவிட்டுப் பிரிகிறோம். இல்லாவிட்டால் அவர் நம்மைவிட்டுப் பிரிகிறார். ஆனந்தத்திற்கு காரணமாக இருந்த அன்பு, அத்தனையும் அழுகைமயமாகி விடுகிறது. நம்மைவிட்டுப் பிரியாத நிலையான பொருள் இறைவன்தான். அவனிடம் அன்புவைத்து விட்டால் அந்த அன்பு முற்றுகிறபோது யாவுமே அவனாகத் தெரியும்.

17. பக்தியை விட்டு நேராக முக்திக்கு நாம் முயற்சி பண்ண வேண்டும் என்பதே இல்லை. பக்தி பண்ணிக் கொண்டிருந்தாலே போதும், தானே அதுவாக முக்திக்கு அழைத்துப் போகும்.

18. இறையுணர்வு என்கிற தவிப்பும் அதைப்பற்றிய நினைப்பும் நமக்கு எப்போதும் இருக்க வேண்டும். பரமாத்மாவுடன் கலப்பதற்காக இப்படி சகிக்க முடியாமல் தவிக்கும் தவிப்புதான் உண்மையான பிரேமை. இந்த பிரேமைக்குத்தான் பக்தி என்று பெயர்.

19. இந்த பிறப்பிற்கு ஏற்பட்ட தாயையே தெய்வமாக வழிபட வேண்டுமானால் எந்தெந்த பிறப்பிற்கும் துணையாக இருக்கிற பரமாத்மாவையும் தாயாக வைத்து வணங்கத்தான் வேண்டும்.

20. கோயிலை மெழுகி சுத்தப்படுத்துகிற போதே நமது மனதில் உள்ள முள்ளையும் அழுக்கையும் அகற்றி துப்புரவாக்கிக்கொண்டு விடுவோம். அப்போது நமது மனதே தங்கமாகி விடும். அந்த கனகசபையில் அன்பே உருவான சிவன் வந்து குடிகொண்டு நாமே ஆலயமாகி விடுவோம்.

21. தினமும் 'நாம் சாகிற போது இறைவனை நினைத்துக் கொண்டே ''சாக'' முடிகிறதா?' என்று பயிற்சி செய்து பார்க்க வேண்டும். அந்த நினைப்புடனேயே தூக்கத்தில் ஆழ்ந்து விடவேண்டும் வேறே நினைவே வரக்கூடாது.

22. பரப்பிரும் மத்தை மனதாலும் வாக்காலும் பிடிக்க முடியாது. மனதும் வாக்கும் அற்றுப்போன மௌனம் தான் அதைவிளக்குவது.

*''மௌன வாக்யா ப்ரகடித பரப்ரஹ்மதத்வம்''*

23. மனதை வைத்துக்கொண்டு ஆரம்பிக்கும் பக்தி மனது அற்றுப் போகும் ஞானத்தில் கொண்டு விட்டுவிடும்.

24. நல்ல எண்ணங்களிலெல்லாம் தலை சிறந்தது அன்புதான். அந்த அன்பை அனைத்து உயிரினங்களிடமும் செலுத்த வேண்டும். அத்தனை உயிரினங்களுக்கும் மூலாதாரமான பரமாத்மாவிடம் செலுத்தி பக்தி செய்ய வேண்டும். மூலத்திடம் அன்பு (பக்தி) செய்யாமல் அதிலிருந்து வந்தவற்றிடம் மட்டும் செய்யப்பார்த்தால் அது சரியாக வராது.

25. அனுபவம்தான் முக்கியம்; ஆணிவேர். உபதேசம் மூளையோடு நிற்காமல் அநுபவமாக பழுக்க வேண்டுமானால் அதற்கு இறைபக்தியும், அதற்கு கொஞ்சங்கூட குறைச்சல் இல்லாத குருபக்தியும் இருந்தால் தான் முடியும்.

26. மனது நின்றால் தான் ஆத்மா பிரகாசிக்கும், அதாவது நமது உண்மையான ஆனந்த நிலை தெரியும், மனதை நிலை நிறுத்துவதற்குத்

தான் குருபக்திவேண்டும், இறைபக்திவேண்டும் என்று நம் சாத்திரங்கள் சொல்கின்றன.

27. பகவானிடம் நாம் செல்வம், ஆரோக்யம், புகழ் இப்படி எது எதையோ வேண்டுகிறோம். உண்மையில் மனமானது கண்டபடி அலையாமல் அதைக் கட்டுப் படுத்துவதற்குத் தான் இறைவனின் அருளை நாம் கோர வேண்டும்.

28. பகவானிடம் புதிதாக நாம் ஒன்றும் கேட்டுப் பெறவேண்டியதில்லை. நம்மிடமே இருக்கும்படியான நம் உண்மை சுயரூபத்தை நாம் அறியவில்லை. நம்முடைய உண்மை சுயரூபம் ஆனந்தமயமானது. பகவானே தான் அது.

29. ஆலயத்திற்கு சுத்தமில்லாமல் போகக்கூடாது. அங்கு அசுத்தமான பொருட்களைச் சேர்க்கக்கூடாது. அப்படியே மனிததேகம் ஒருதேவாலயமானதால் அதிலும் அசுத்தமான பொருட்களைச் சேர்க்கக்கூடாது.

30. மனதினால் மனனம் செய்து சப்தம் போட்டு வெளியே சொல்லாமல் ரகசியமாக உபாசிப்பதால் எது நம்மை காக்குமோ அதுவே மந்திரம்.

31. பரலோகத்திற்குத்தான் பக்திவழிகாட்டுமென்பதில்லை. இகலோக காரியம் ஒருத்தரல் நடத்த வேண்டியிருக்கும் வரை. அதற்கும் பக்தி உபகாரம் பண்ணும்.

32. நம்முடைய அலை பாய்கிற அசட்டுமனதை இழுத்து நிறுத்திவைத்து அதற்கு நிறைவும் ஆனந்தமும் கொடுக்கிற ஒருமூர்த்தி கிடைத்தால்தான் நமக்கு பக்தி சுரக்கிறது.

33: கிருஷ்ணன் பண்ணிய திருட்டுக்களை நினைத்தால் நமக்கு திருட்டு புத்தி போகும். அவன் ராச லீலை பண்ணியதை நினைத்தால் நமக்கு காமம் போகும். அப்படி விக்நேசுவரருடைய வக்ரதுண்டத்தை நினைத்தால் நமது வக்ரகுணங்களும் போகும்.

34. பக்தி என்பது மனதின் காரியமில்லை. மனதின் ஆட்டங்கள் இல்லாமல் இன்னும் ஆழமாக ஒருபோதும் ஆடாமல் ''நான்'' என்கிற ஸ்திரமான முழு உணர்ச்சியாக உள்ள அகங்காரத்திலே உண்டாவது பக்தி.

35. பக்தியில் தன்னை கொடுத்துக் கொள்ளும் போது, அகங்காரத்தின் இருப்பிடமான இருதயத்தில் அகங்காரம் மெலிந்து மெலிந்து பக்தியே வியாபித்து அது பக்தியின் இருப்பிடம் என்னும்படியாக ஆகிவிடும்.

36. நீர்ப்பெருக்கு எப்படி ஒரே திசையில் ஒருமித்துப் பாய்கிறதோ அப்படி ஒரே விஷயமாக எண்ணம் ஒருமித்துப் போவது தான் தியானம்.

37. எட்டாத தத்துவத்தை தம் மனதுக்கு எட்டும்படியான ரொம்பவும் அன்பான ருபத்தில் பார்த்தாலே போதும். அந்த தத்துவம் நாம் எட்டிப் பிடிக்கும்படி இறங்கி வந்துவிடும். அப்படி பார்ப்பதுதான் பக்தி.

38. நாமே அலங்காரம் பண்ணிக் கொண்டால் அது அகங்காரத்தைக் கொடுக்கிறது. அந்த அலங்காரத்தை அம்பாளுக்கு பண்ணிப் பார்த்தாலோ அது அகங்காரத்தை கெடுக்கிறது.

39. வெளி அலங்காரம் மட்டுமில்லை. படிப்பு. பணம், பதவி, புகழ் என்று நாம் தேடிப் போவதெல்லாமும் அலங்காரம்தான். இந்தஅலங்காரங்களையும் விடப் பெரிய அலங்காரம் அம்பாள் அருளுக்கு பாத்திரமாவதுதான். அதைவிட பெரிய நகை, ஆபரணம், அலங்காரம் இல்லை. ''மற்றதெல்லாம் அலங்காரமே இல்லை''. என்ற ஞானத்தைத் தரும் அலங்காரம் இது.

40. அழகு மட்டும் இருந்தால் போதுமா? நமக்கு வேண்டியது அருள். இறைவன் அழகு வடிவமாக இருக்கிறாரென்றால் அந்த அழகே அருள் வடிவம் தான். காருண்யம் தான் லாவண்யம் (அழகு).

41. இறைவன் பேரால் நாமெல்லாரும் ஒன்று சேரத்தான் வேண்டுமே தவிர கட்சி ஆடிக் கொண்டு பிரிந்து போகக்கூடாது. அவர் பாதங்களில் அனைத்து மக்களும் அன்பிலே ஒன்று சேரவேண்டும்.

42. பரமாத்மாவின் பார்வையில் படாமல் எதுவும் செய்ய முடியாது. அவன் வெறும் சாட்சி மட்டுமல்ல. பார்க்கிற காரியங்களின். பலனை நமக்குத் தீர்ப்பாக, தண்டனையாக அல்லது பரிசுகளாக வழங்கும் நீதிபதியும் அவன்தான். சாட்சி, நீதிபதி இரண்டுமாக இருக்கிறான் அவன்.

43. சாட்சி, நீதிபதி இரண்டும் ஒருவராகவே இருப்பதால் பொய் சாட்சியை நிஜமென்று நம்பி நீதிபதி தீர்ப்பு கொடுப்பதற்கு இடமேயில்லை. இந்த சாட்சி – நீதிபதியை யாரும் ஏமாற்ற முடியாது. அநேக குற்றங்கள் நீதிமன்றத்திற்குகே போகாத மாதிரி இந்த பெரிய நீதிபதியிடமிருந்து யாருமே தப்பிக்கவும் முடியாது.

44. இந்த நினைப்புத்தான் அநாதிகாலமாக மக்களை இந்த மட்டுமாவது நல்லவழியில் போகும்படி பண்ணியிருக்கிறது. அந்த சர்வசாட்சி நாம் பண்ணுவதையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கிறான்

என்று அப்பப்போவாது நமக்கு ஞாபகம் வருவதால் தான் ஏதோ ஒரு அளவுக்காவது தவறுகள் செய்யாமல் இருக்கிறோம்.

45. நாம் இறைவனாக இல்லாவிட்டால் இறையைத் தவிர வேறான ஒன்றாக இருக்க வேண்டும். அவ்வாறெனில் பரமாத்மாவுக்கு வேறான பொருள்களும் உண்டு என்றாகிவிடும். அதாவது பலபொருள்களில் பரமாத்மாவும் ஒன்று என்றாகிவிடும். அவருடைய சம்பந்தமில்லாமல்அந்தப் பல பொருள்கள் உண்டாகி இருக்கின்றன என்றாகும். அப்படி இருப்பின் அவர் பரமாத்மா, இறைவன் என்பதே பொருந்தாதே!

46. இறைவன் கருணைக் கடலாக இருந்து நம்மைக் கேட்காமலேயே துயர் நீக்கம் செய்தாலும் சரி, அல்லது பலனைத் தருபவர் என்ற முறையில் நம் பாவத்தைத் தண்டித்தே தீருவான் என்றாலும் சரி, அல்லது கஷ்டத்தை மாற்றாமலே அதைத் தாங்கிக் கொள்ளும் பக்குவத்தை நமக்கு தந்தாலும் சரி, அவனிடம் முறையிட்டுக் கொள்வதே நமக்கு ஓரளவு சாந்தி.

47. எங்கும் இருக்கும் இறைவன் நாம் இருக்கச் சொல்லும் இடத்தில் கல், மண், செம்பு முதலிய எந்த உருவத்தில் வைத்துக் கூப்பிட்டாலும் வருவான். அப்படிப்பட்ட யோக்யதையும் கருணையும் அவனுக்கு நிச்சயமாக இருக்கிறது. இல்லை என்றால் அப்படிப்பட்ட இறைவன் நமக்கு வேண்டவே வேண்டாம்.

48. தெய்வீக சக்திகளைப் பெற்ற மகான்கள் ஞானக்கண் கொண்டு நமக்கு தெரியாத அற்புதக் காட்சிகளைப் பார்த்து அந்ததெய்வ மூர்த்திகளை வர்ணிக்கிறார்கள். நமக்குக் கேளாத திவ்யசப்தங்களைக் கேட்டு மந்திரங்களாக்கித் தந்திருக்கிறார்கள்.

49. இந்த உலகத்தையெல்லாம் படைக்கிறவன் யார்? நமக்கெல்லாம் இவ்வளவு உணவு, உடை. சௌக்கியங்களைக் கொடுக்கிறவன் யார்? அருட்கடலாக இருப்பவன் யார்? அவனைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நாம் விரும்பினால் தம்முடைய சித்தத்தை அழுக்கு இல்லாமல், ஆடாமல் வைத்துக் கொள்ள வேண்டும்.

50. அழகு, கருணை சக்தி, ஞானம் எல்லாவற்றிலுமாக பூரணமாக ஒன்று உண்டு என்றால் அது இறைவன் என்ற கருத்துத்தான்.

51. மனோதத்துவப்படி நாம் எதை நினைத்துக் கொண்டேயிருக்கிறேமோ அதுவே ஆகிறோம். இறைவனின் கல்யாண குணங்களையே எண்ணுவதால் நம்மிடமுள்ள குறைகள் நீங்கி நாமும் நல்லவர்களாகிறோம்.

52. இறைவன் எப்போதும் உள்ளே அடங்கி பிரம்மமாக இருக்கிறார். வெளியே சகல காரியங்களையும் செய்யும் ஈசுவரனாக இருக்கிறார்

53. உருவமற்ற பரமாத்ம வஸ்துவிலிருந்து தான் எல்லா கல்யாண குணங்களும் வந்திருக்கின்றன. உருவமற்ற பரமாத்மாவிடமிருந்து தான் அனைத்து உருவங்களும் தோன்றியிருக்கின்றன.

54. மஞ்சள் பழத்தை மஞ்சளாகவே பார்க்கிறபோது மேற்கொண்டு மனத்திற்கு வேலை இல்லாதது போலவே பரமாத்மாவை பரமாத்மாகவே பார்க்கும் போது மனதிற்கு வேலை இல்லாமற் போகிறது.

55. உள்ளத்தை வெளுப்பான பாலாக்கிக் கொண்டால் பாற்கடலில் படுத்துக் கொண்டிருப்பவனே, நம்முடைய அன்பு அலை மோதும் உள்ளத்தில் தானே வெண்ணெயும் கட்டியுமாக வந்து மிதப்பான். அப்புறம் நம்மையே வெண்ணெயாக்கித் தனக்குள் வைத்துக் கொண்டுவிடுவான.

56. ஆதி, தோற்றம், அந்தம், முடிவு ஆதியந்த மில்லாமல் அநாதியாய் ஆனந்தமாயிருப்பது பரமாத்மா மட்டும்தான். மாயைக்கு அந்தம் உண்டு. ஞானம் வந்தவுடன் அது இருந்த இடம் தெரியாமல் அழிந்து விடும்.

57. இறைவனும் குருவும் வேறில்லை. இறைவனே தன்னைக் காட்டிக் கொடுக்கிற குரு ரூபத்தில் இருக்கிறான். இப்படி நம்பி ஒருவரை குருவாக வரித்துவிட்டால் பலன் நிச்சயம்.

58. வெளியிலே நாம் பார்க்கும் விசாலமான ஆகாசம் ''பேரம்பலம்'' என்பது. அதுவே உள்ளே சின்ன ஆகாசமாக இருப்பதைத்தான் ''சிற்றம்பலம்'' என்றும் சொல்வது.

59. மனோ, வாக்கு, காயங்களால் நல்லதை நினைக்கிறோம், செய்கிறோம். கெட்டதையும் நினைக்கிறோம், செய்கிறோம். அவை எல்லாவற்றையும் இறைவன் கவனித்துக் கொள்கிறான் அவரவர்கள் பண்ணின கர்மத்திற்கேற்பப் பலனையும் அவன் கொடுக்கிறான்.

60. ஒரே விளக்குத்தான்–பிரம்மசைதன்யம். அதுவே சிவப்புப் பட்டை வழியாகத் தெரியும் போது ''பிரம்மா'' எனப்படுகிறது. நீலப்பட்டை வழியாக பார்க்கிறபோது அதுவே ''விஷ்ணு'', வர்ணம் பூசப்படாத 'transparent' வெளுப்புக் கண்ணாடி மூலம் பார்த்தால் அதுவே சிவன்.

61. 'கோபாலன்' என்றாலும் ''பசுபதி'' என்றாலும் ஒரே அர்த்தம் தான். இப்பெயர்களை ஆலோசித்துப் பார்த்தாலே சைவ வைணவ பேதம் போய்விடும்.

62. எல்லாவற்றையும் திறம்பட திட்டம் போட்டு நடத்தி வரும் ஒரு மகாபெரிய புத்தி இருப்பது தெரிகிறது. இதைத் தான் இறைவன் என்பது.

63. எதுவானாலும் ''அம்மா'' ''அம்மா'' என்று அந்த ஒருத்தியையே குழந்தை பிடித்துக் கொண்டிருக்கிறது. அதுபோல நாமும் பரமாத்மாவை விடாப்பிடியாக பிடித்துக்கொள்ள, அவரை ''உலக மாதா'' வாகவும் நம்மைக் குழந்தைகளாகவும் ஆக்கிக் கொள்ள வேண்டும். ''குழந்தையாகி விட வேண்டும்'' என்று உபநிடதமும் உபதேசிக்கிறது *(ப்ருஹத் தாரண்யக உபநிடதம்)*

64. அழிந்து போகிற உடம்புக்கு மட்டும் அம்மாவாக இல்லாமல் அழியாத உயிருக்கும் அம்மாவாக இருந்து இகத்திலும் பரத்திலும் ரட்சிக்கிற பரம கருணை கொண்டதாய், பரமாத்மாவே!

65. பரமாத்மாவை பேரருளாளனாக பார்க்கவேண்டுமானால் அதற்கு அம்பாள் ரூபத்தை தவிர வேறில்லை. குழந்தைக்குத்தாய், கன்றுக்குப் பசுவைப் போல எந்த பிறவியிலும், எந்தக் காலத்திலும், எல்லா பிராணிகளுக்கும் தாயாராக இருக்கும் பரதேவதையின் பாதாரவிந்தத்தில் நிறைந்த அன்பு இருந்து விட்டால வாழ்க்கையே நிறைந்து பரிபூரண ஆனந்தம் உண்டாகிவிடும்.

66. யாரொருவர் ஒன்றை ஆக்குவதற்கு சக்தியும் அதிகாரமும் பெற்றிருக்கிறாரோ அவரேதான் அதை அழிப்பதற்கு சக்தியும் அதிகாரமும் பெற்றவராவார்.

67. அவள் (அம்பாள்), கொடுக்காவிட்டால் எந்த சக்தியுமே இல்லை. வாக்குமட்டுமல்ல. மூச்சு கூட அவள் கொடுக்காமல் இல்லை. நாமாக மூச்சு இழுக்கிறோம் என்றால் சாகவே மாட்டோமே! இப்படி உயிரே நம்முடையதில்லை என்கிறபோது என்ன கவலை, பயம் இருக்க முடியும்? இப்படிப்படுகிற கவலையெல்லாம், பயமெல்லாம் சுற்றி, சுற்றி இந்த உயிரைக் காத்துக் கொள்வதற்குத்தானே? இதை அவள் சமாசாரம் என்று தள்ளி விட்டோமானால் அப்புறம் எத்தனை நிம்மதி?

68. இந்த உலகத்துக்கெல்லாம் காரணமான ஒரு பரம்பொருள் இருக்கிறது. நமக்கும் இது தான் காரணம். நம்மை அது தான் படைத்திருக்கிறது. நாம் அற்பஜீவாத்மா, அது மகத்தான பரமாத்மா ஜீவாத்மாவாக உள்ள நாம் மறுபடி போய் அந்த பரமாத்மாவுடன் சேர்ந்து விட வேண்டும்.

69. நம் மன அழுக்குகளைப் போக்குகிற நல்ல நீர்கள் பல இருந்தாலும் கூட வேறொரு நீரான தெய்வபக்தி இல்லாவிட்டால் இந்த நல்ல நீர்களாகிய குணங்கள் மட்டும் நமக்கு மனத்தூய்மையை

கொடுக்க மாட்டா. எல்லா அழுக்குகளும் நீங்குவதற்கு கங்கை நீராக இருப்பது இறைவனிடம் செய்கிற பிரார்த்தனைதான்.

70. எழுத்து, அதைப்படித்து மூளைக்குப் புரிகிற அர்த்தம் – இவைகளோடு வேதம் முடிந்துபோய் விடுவதில்லை. பெரிய பெரிய அனுபவங்களைத் தருகிற சக்தி அதனுடைய எழுத்து வடிவத்திற் குள்ளேயே இருக்கிறது. அதை உள்ளே மறைத்து வைத்துக் கொண்டிருக்கும் ''மறை''யாக அது இருக்கிறது.

71. ஒரு மனிதன் தன்னிடம் இருக்கிற பெரிய பொருள் புத்தி என்று தான் நினைக்கிறான். அதைப்பற்றி கர்வம் கொண்டிருக்கிறான். ஆனால் அதை அப்படியே தியாகம் செய்து விட்டுத் தன்னை பரம எளிமையாக்கி கொண்டால் தான் வேதத்தின் பலனை அவன் அடைய முடியும்.

72. அறிகிற புலன் (இந்திரியம்) புத்தி. 'வேத' என்றாலும் 'அறிவது' தான். *பரமசத்தியத்தைப்பற்றி அறிவதே வேதம்.*

73. தனி மனிதர் ஒவ்வொருவரும் தமது தர்மப்படி மத நியதிகளை செய்து அவர் தம் சொந்த வாழ்க்கையாலேயே மதம் காக்கப் படவேண்டும்.

74. பிற மதத்தினர் என்றவுடனேயே எதிர்ப்புணர்ச்சியோடுதான் வாதிடுவது என்றில்லாமல் நேயத்துடனேயே அணுகி, தங்களுக்குள்ள நியாயமான உரிமைகளைப் பொறுமையாக எடுத்துச் சொல்லிப் பார்ப்பது என்ற மனப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

75. ''தனக்கென்று மட்டும் மனிதன் செய்து கொள்கிற காரியங்கள் அவனை அதர்மத்தில் தள்ளும். எனவே இவனுக்கு இருக்கிற சுயநலத்தைக் குறைக்க வேண்டும் இவனுக்கு இறைவனின் நினைப்பை உண்டாக்கி அவனுடைய உடைமையே உலகமெல்லாம் என்ற அறிவை ஏற்படுத்த வேண்டும்'' என்ற அடிப்படையில் தான் சகல மதங்களும் உண்டாகியிருக்கின்றன.

76, ''உன் ஆசைப்படி நடந்து கொண்டு உனக்கென்று சொத்து சேர்த்துக் கொள்'' என்று சொல்கிற மதம் எதுவுமே இல்லை. தன்னை முக்கியமாக நினைத்துக் கொள்கிறவரையில் இவன் சுயநலத்துக்குத்தான் காரியம் செய்து கொள்வான என்பதால் அத்தனை மதங்களும் கடவுள் என்கிற ஒன்றைச் சொல்லி. ''பிரபஞ்சம் முழுவதையும் செய்த அந்த மகா சக்தியின் முன் நீ ஒன்றுமேயில்லை'' என்று காட்டி இவனுடைய அகங்காரத்தைக் குறைக்கின்றன.

77. எல்லா சமயங்களும் கடவுள் ஒருவரே என்றே சொல்கின்றன. ஒருவரேயான அந்தக் கடவுள் எந்த சமயத்தின்மூலம் வழிபட்டாலும்

அதை ஏற்றுக் கொள்ளத்தான் செய்வார். எனவே எவருமே தங்கள் பிறந்த மதத்தை விட்டு இன்னொரு மதத்தை தழுவ வேண்டியதில்லை.

78. ''பாபத்தினால், புலன் இன்பத்தினால் கிடைக்கிற ஆனந்தம் ரொம்ப தாற்காலிகமானது தான். பரமாத்மாவைச் சேர்ந்திருப்பது தான் நிரந்தரமான ஆனந்தம்'' என்று சொல்லி சம்சாரத்திலிருந்து அவனை விடுவித்து பகவானிடத்தில் சேர்ப்பது தான் ஒவ்வொரு மதத்திற்கும் லட்சியமாகும்.

79. பந்தத்திலிருந்து விடுதலை பெற்று ஆத்மா பூரண சுதந்திரத்துடன் எந்நாளும் ஆனந்தமாக இருக்கிற நிலையே ''மோட்சம்'' இதை நமக்குக் கிட்டச் செய்வதற்கே மதம் என்பது ஏற்பட்டிருக்கிறது.

80. தங்களுக்குள் எத்தனை பேதமிருந்தாலும் இப்போதிருக்கிற மாதிரி மனிதனைக் காமம், குரோதம் இல்லாமல் நல்லவனாக்கி அன்பு, அடக்கம், சாந்தம் தியாகம் முதலிய குணங்கள் உடையவனாகப் பண்ண வேண்டும் என்பதில் எல்லா மதங்களும் ஒரே குரலில் தான் பேசுகின்றன.

81. ''கடவுள் ஒருவரே' என்கிற ஒரே லட்சியத்துக்கு அழைத்து செல்வதற்காக வெவ்வேறு மதத்தினர் போட்டி போட்டிக் கொண்டு மதமாற்றத்தில் முனைவது அர்த்தமற்ற காரியம்.

82. மதங்களிக்கிடையே கோட்பாடுகளிலும் நடைமுறைகளிலும் சில வித்தியாசங்கள் இருப்பதில் தவறில்லை. எல்லாம் தங்களையும் ஒரே போல ஆக்க வேண்டிய அவசியம் இல்லை. ஒரே மாதிரி ஆக்காமல் எல்லா மதத்தினரும் மனத்தில் ஒற்றுமையோடு இருப்பதுதான் அவசியம். Uniformity அவசியமில்லை. Unity இருப்பதே அவசியம்.

83. நல்லொழுக்கம், நல்லதவம், சாந்தம், கருணை நிரம்பியவர்களை உண்டு பண்ணுவதே நம்மதம் தழைக்க வழி. *எதிர் பிரசாரம் எதுவுமே வேண்டாம். மதநெறிகளை உயிரோடு வாழ்ந்து காட்டிக் கொண்டிருக்கிற பிரதிநிதிகள்தான் வேண்டும். இவர்களால்தான் இதுவரை காலம் காலமாக நம் மதம் உயிரோடிருந்து வந்திருக்கிறது. இனி மேலும் இப்படிப்பட்டவர்களால் தான் அது உயிர் வாழ வேண்டும்.*

84. இந்து மதத்தினர் ரொம்பவும் பெருமைப்பட வேண்டிய அம்சம் இந்த மதம் ஒன்றுதான் தன்னை அனுசரிப்பதின் முலம் மட்டுமே ஒரு உயிர் உய்வு பெற முடியும் என்று தனி உரிமை கொண்டாடிக் கொள்ளாமலிருப்பதேயாகும்.

85. மனிதனின் ஆசையைப் பூர்த்திசெய்வது முடியாத காரியம் ஆசைகளைக் குறைத்துக் கொண்டாலே உண்மையான ஆனந்தம் காண முடியும். இதற்குவழி காட்டுவது மதம் தான்.

86. நாம் கெட்ட எண்ணத்திலும் காரியத்திலும் ஈடுபட நேரம் இன்றி நல்ல காரியங்களை ஒரு விதிப்பிரகாரம் ஒழுங்கு தப்பாமல் செய்வதுதான் முக்கியம். இதற்குத்தான் சாத்திரங்கள் நமக்கு விதிகள் போட்டிருக்கின்றன.

87. உண்மையில் ''மதம்'' ***அபினைப் போன்றது இல்லை*** அதுதான் ''உலகமே உண்மை, இங்கே பார்க்கிறதற்கும் அநுபவிப்பதற்கும் மேலே எதுவும் இல்லை'' என்று புலன்கள் மயக்கத்தில் தூங்கிக் கொண்டிருப்பவர்களை ***மயக்கம் தெளிவித்து எழுப்புகிற மருந்து***.

88. ''காரியம் செய்து விட்டுப் போங்கள். ஆனால் ஆசை வயப்பட்டு செய்வதைக் குறைத்துக் கொள்ளுங்கள். சொந்த ஆசைக்கு என்றில்லாமல் உலக நலனுக்காக காரியங்களைப் பண்ண ஆரம்பியுங்கள்'' என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

89. ''சித்தமலம்' என்று மாணிக்க வாசகர் சொல்லும்போது ***சித்தத்திற்கு*** ஏற்படும் தப்பு சிந்தனையான மலத்தை சொல்லாமல் ***சித்தத்தையே*** ஆத்மாவிற்கு ஏற்பட்ட மலமாகச் சொல்லியிருக்கிறார்.

90. கனவில் இருந்த அத்தனை பேர்களும் பொருள்களும் விழிப்பில் போய் விடுகின்றன. இந்த மாதிரி (உலக) கனவிலிருந்து நாம் விழித்துக் கொண்டால் உலகத்திலுள்ள சகலபொருள்களும் பொய்யாகிப்போய் அவற்றைக் கண்ட அறிவு தான் மிஞ்சும். சத்தியமான பொருள் அதுதான. அதற்குத் தான் ''அத்வைதம்'' என்று பெயர்.

91. ''பரமாத்மாவை எனக்குத் தெரியும் என்பவனுக்குத் தெரியாது. தெரியவில்லை என்பவன் தான் தெரிந்தவன்'' என்று கேனோபநிஷத் கூறுகிறது.

***யஸ்ய அமதம் தஸ்யமதம், மதம் தஸ்ய நவேதஸ:***

92. அறியப்படவில்லை என்றால் என்ன? அது வேறாக இருந்து அறியப்படவில்லை என்பதே பொருள். விளக்கைக் காட்டவேறு விளக்கு கொண்டு வந்தால் அதற்கு அர்த்தமில்லை. விளக்கைத் தெரிந்துகொள்ள வேறு ஒன்றும் வேண்டாம். அது போல பிரம்மமாகிற ஞானம், அறிவு, சுயம்பிரகாசமானது.

93. ***இருப்பது ஒன்றுதான்.*** *பார்ப்பது பலவாக* ***இருந்தாலும் உள்ளது ஒன்றே*** என்று அநுபவத்தில் ஆக்கிக் கொள்ள வேண்டும். இதனால் நிரந்தரமான சாந்தியை, சதானந்தத்தைப் பெற வேண்டும்.

இதுதான் உபநிடதங்களின் இலட்சியம்.

94. நம்மை ஒரு கட்டுப்பாட்டில், நெறியில் கொண்டுவந்து அடக்கி வைக்கிற கட்டளைப் புத்தகங்களே சாத்திரங்கள் எனப்படுபவை.

95. ஊருக்குத் கோயில், கோயிலுக்கு கோபுரம். கோபுரத்துக்கு சிகரம என உயர்ந்து கொண்டே போகிற மாதிரி நம்முடைய தத்துவங்களுக்குச் சிகரமாக வேத முடிவாக இருப்பவை உபநிடதங்களே.

96. நம் மதத்திற்கு வேதம் வேர். பக்தி, கோயில், தியானம், ஞானம் எல்லாவற்றுக்கும் மூலம் அது. மூலம் என்றால் வேர். (வேர் பூமிக்குள்ளே மறைவாக ஓடிக் கொண்டிருப்பதால் வேதத்திற்கு ''மறை'' என்ற பெயர் பொருத்தமாக இருக்கிறது)

97. ஆத்ம நலத்திற்காக நாம் என்ன செய்ய வேண்டுமோ அதிலேயே உலக நலனையும் பயனாக ஏற்படுத்தித் தருவது வேதம் இது இரண்டும் ஏற்பட எது உதவுகிறதோ அதுதான் ''தர்மம்'' என்பது.

98. வேதம் வேண்டாம், கோயில் வேண்டாம் என்பது தான் மிகவும் உச்ச நிலையில் வேதமே சொல்வது. ஞானம் வந்த நிலையில் பேதம் ஏதும் இல்லை. ''பிராம்மணன் பிராம்மணன் இல்லை. தீண்டாதான் தீண்டாதான் இல்லை'' என்று வேதமே சொல்கிறது.

99. ஆரம்பமும் முடிவும் ஒன்றுதான். ஆதியும் அந்தமும் ஒன்று தான். நாம் தேடிக் கொண்டே போகிற பரம்பொருள் கடைசியில் எல்லா தேடல்களுக்கும் முதல் நினைப்பாக இருக்கிற ''நான்'' என்பதாகத்தான் முடிகிறது. இதுதான் ''அத்வைதம்''

100. 'மதம்' என்பதற்கு பொருள் மதியினால் பெறப்பட்டது'' என்பது. மிக மிக நன்றாக ஆராய்ந்து பார்த்து நிரூபணம் பண்ணி முடிவு கண்ட கொள்கையும் மதம் தான். அது நம்மால் நிரூபணம் பண்ணிப் பார்த்துக் கொள்ள முடியா விட்டாலும் சாத்திரங்களும் பெரியவர்களும் சொல்வதால் அது சரியாத்தான் இருக்க வேண்டும் என்று நம்புவதும் மதம் தான்.

101. கண்ட இடத்தில் நம் துன்பங்களைப் போய்ச் சொல்லிக் கொள்ளாமல், கேட்பவர்கள் எப்படி எடுத்துக் கொள்வார்களோ என்ற ஆதங்கம் இல்லாமல் இறைவனிடத்தில் கஷ்டத்தை மனம் விட்டுச் சொல்லிக் கொள்ளலாம்.

102. எதை நினைத்து நாம் ஆசைப்படுகிறோமோ அதன் சுபாவம் நமக்கு வந்து சேருகிறது. கடவுளை நினைத்து நாம் தியானம் செய்யும் போது அந்த பரம்பொருளின் பெருமை மிகுந்த குணங்கள் நம்மையும் ஆட்கொள்கின்றன. இதையே நாம் பக்தி என்று சொல்கிறோம்.

103. உதவாத பொருளை தண்டம் என்கிறோம். இறைவன் தந்த சக்தியால் தான் தம் உடல் இயங்குகிறது. அது இல்லாவிட்டால் இது வெறும் ''தண்டம்'' தான். இதை நினைவு படுத்திக் கொண்டு இறைவனுக்கு நன்றி செலுத்துவதே 'நமஸ்காரம்'

104. இறைவனால் நமக்கு கொடுக்கப்பட்டதை அவனுக்கு காட்டாமல் தாமே அனுபவித்தால் நாம் திருடர்களாவோம்.

105. கெட்டிக்காரன் என்று தன்னை நினைத்துக் கொண்டிருக்கும் மனிதன் இத்தனையையும், இவனையும் சேர்த்து செய்த அந்த மகர கெட்டிக்காரனை தெரிந்து கொள்ள வேண்டும்.

106. உலகமே முழுகிப் போனாலும் நிற்காமல் நடக்க வேண்டிய காரியம் தியானம். ஏனெனில் உலகம் முழுகும் போதும் நமக்குக் கைகொடுப்பது இதுதான்.

107. நாம் அன்பு செலுத்திய பொருள் நம்மை விட்டு என்றும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். என்றும் மாறாமல் இருக்கிற பொருளாகிய பரமாத்மாவிடம் அன்பைப் பூரணமாக வைத்து விடவேண்டும். பரமாத்மா நம்மை விட்டு ஒரு போதும் நீங்குவதில்லை.

108. பக்தி ரசத்தில், கவிரசத்தில் (அப்படி) வைத்துக் கொள்ளலாமே தவிர உண்மையில் '' ஜீவன்'' என்று ஒருவன் இருந்து கொண்டு ''சிவனை''ப் பெறவில்லை. ஜீவன் போய்த்தான் சிவனே எஞ்சி நிற்கிறான்.

109. மதம் என்றால் என்ன? ஆத்மாவுக்கு வந்திருக்கிற வியாதி தீருவதிற்கு வைத்தியம் செய்வது தான் மதம்.

110. சகலமும் ஆன பரமாத்மா நாம் அவரை எந்த ரூபத்தில் வழிபட்டாலும் அதன்மூலம் அருள் புரிகிறார். படிப்படியாக நம் நிலையை உயர்த்தி கடைசியில் மனதே இல்லாத மனதைக் கடந்த நிலை உண்டாகிறது.

111. நாம் நம் புத்திபலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு ஒரு வீட்டைக் கட்டுகிறோம். குருவி தன் தேக பலத்தையும் புத்திபலத்தையும் வைத்துக் கொண்டு கூட்டைக் கட்டுகிறது. இந்த உலகத்தை எல்லாம் நிர்மாணிக்கிற சக்தி கொண்ட ஒன்று இருக்கிறதல்லவா? அதுதான் இறைவன்.

112. குறை இருக்கிறது என்றால் எதுவோ தேவைப்படுகிறது என்று பொருள். தேவையே இல்லாவிட்டால் நிறைந்துவிடலாம். நம் குறைகளைக் களையச் செய்கிற பரமாத்மா கடைசியில் நமக்கு எதுவும் தேவையே இல்லை என்கிற நிறைவையும் தந்துவிடுவார்.

113. ''நான் செய்கிறேன். எனக்காகச் செய்து கொள்கிறேன்'' என்கிற அகம்பாவம் இல்லாமல் கடமையைச் செய்து பலனை

இறைவனுடைய பாதத்தில் அர்ப்பணம் பண்ணுவதுதான். கீதை சொல்லுகிற கர்மயோகம். சொந்தவிருப்பு வெறுப்பு இல்லாமல் உலக நன்மைக்காக காரியம் செய்து ஆத்ம தூய்மை பெறுகிற இப்பண்பாடு வேத காலம் தொட்டு நம் தேசத்தில் தழைத்து வந்திருக்கிறது.

114. ***காரியம் இல்லாத நிலையில் எதைப் பிரம்மம் என்கிறோமோ அதையே காரியங்கள செய்கிறபோது இறைவன் என்கிறோம்.*** ஈசுவான், பகவான், கடவுள், தெய்வம், ஸ்வாமி என்று சொல்வதெல்லாம் இதையே.

115. காரியம் நின்றால் தான், அதாவது மனதில் எண்ணமே தோன்றாமல் இருந்தால் தான் எந்தக் காரியமும் இல்லாத பிரம்ம நிலையை அடைய முடியும். ஆனால் இந்த மனதால் ஒரு கணம் கூட எதையும் நினைக்காமல் இருக்க முடிவில்லையே! இதை எப்படி நிறுத்தப் பழகுவது? இந்தப் பழக்கத்திற்கு வழிதான் பக்தி.

116. இடையறாத இறை சிந்தனைக்குத்தான் பக்தி என்று பெயர், இதில் அன்பு மிகவும் முக்கியம். ***அன்போடு அவனை நினைப்பதே பக்தி.***

117. குறைகள் அற்ற கருணைக் கடலாக இறைவனைத தியானம் செய்து கொண்டே இருப்பதால் நம்முடைய குறைகள் விலகி நாம் அன்பு மயமாகிறோம். உண்மையான பக்தி வைத்துவிட்டால் அப்புறம் மனது பாபத்தில் பிரவேசிக்கவே செய்யாது. உலகத்தில் பாப எண்ணங்கள் விலகுவதற்கு பக்தியைத் தவிர வேறு வழியே இல்லை.

118. ஒவ்வொரு மதத்திலும் சின்னங்களும், மூர்த்திகளும், சடங்குகளும் வேறுபடலாம். ஆனால் அருள் தரும் பரமாத்மா மாறவில்லை. எனவே எவரும் ´தங்கள் மதத்தைவிட்டு விட்டு இன்னொரு மதத்திற்கு மாற வேண்டியதில்லை. இப்படி மகம் மாறுகிறவர்கள் தங்கள் பிறந்த மதத்தை மட்டுமன்றி சேருகிற மதத்தையும் குறைவு படுத்துகிறார்கள்.

119. நம் சொத்து. பிறர் சொத்து என்றெல்லாம் உரிமை கொண்டாடுகிறோமே, உண்மையில் இந்தச் சொத்தெல்லாம் அவற்றிற்கு சொந்தம் கோரும் நாம், பிறர், எல்லோருமே – அவனுடைய சொத்துதான். அவன் இல்லாவிட்டால் இந்த பிரபஞ்சம் இல்லை, நாமும் இல்லை.

120. நம் சொத்து என்று நாம் நினைத்துக் கொண்டிருப்பதை நம் விருப்பப்படி விநியோகிக்க உரிமை பெற்றிருக்கிறோம் அல்லவா? அப்படியே இறைவனின் சொத்தாகிய நாமும் நம்மை அவன் இஷ்டப்படியே நடத்தட்டும் என்று விட்டு விட்டால் நமக்கு எந்த பாரமும் இல்லை. ஒரே ஆனந்தம் தான்.





# அறநெறி

121. ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்றால் அதற்கு முடிவேயிருக்காது. ஒன்று பூர்த்தி ஆயிற்று என்றால் இன்றொன்று என்று அது போய்க் கொண்டே தானிருக்கும். முடிவிலே அத்தனையும் சம்சார பந்தத்தை மேலும் மேலும் இறுக்குகிறவை தான்.

122. இந்த உடல் வெறும் மாயையே தவிர பிரம்ம ஸ்வருபமான தனக்கு சம்பந்தப்பட்டதில்லை என்று அதைப்பற்றிய – அது பொய்யே என்ற உண்மையை – அநுபவத்தில் அறிந்தவன் மேல் நிலைஞானி அவன் தான் உண்மையான ஞானி.

123. அழுக்கைத் தேய்த்துக் கழுவாமால் மூடி மூடி வைத்தால் அது பொய் என்ற சிரங்காகி விடும். அது மாதிரி தப்பை மூடி மறைத்தால். அது பொய் என்ற சிரங்காகி விடுகிறது. உள்ளத்தை ரொம்பவும் கெடுக்கிற பயங்கரமான சிரங்கு பொய்தான்.

124. இன்னொரு பெரிய அழுக்கு (குழந்தைகளிடத்தில்) சுலபத்தில் சேர்கிற அழுக்கு, பொறாமைக்குணம். இவ்வழுக்கான எண்ணங்களாலேயே அறிவு, உடம்பு இரண்டையும் பாழாக்கிக் கொள்கிறோம். நம்மை நாமே கெடுத்துக் கொள்வதைத் தவிர பொறாமையால் வேறு எந்த விதப் பயனும் இல்லை.

125. எதனால் தப்பை மறைக்கப் பார்க்கிறோம்? ஒன்று, நம்மை மற்றவர் நல்லவன் என்றே நினைக்க வேண்டும் என்ற பொய் எண்ணத்தினால் அல்லது இன்னொருத்தரிடம் பயத்தினால் மறைக்கப் பார்க்கிறோம். பொய் என்பது சிரங்கு என்றால் பயம் என்பது சொறி மாதிரி.

126. எப்படி ஒரு நிறமும் இல்லாத சூரிய வெளிச்சத்தில்தான் அத்தனை நிறங்களும் பிறக்கின்றனவோ, அத்தனை நிறங்களையும் வெளிவிடுகின்ற மூலப்பொருள்கள் எல்லாம் இருக்கின்றவோ, அப்படியே ஒரு உணர்ச்சியும் இல்லாத சாந்தத்தில் தான் அத்தனை உணர்ச்சிகளும் பிறந்திருக்கின்றன.

127. (நமக்கு) வருத்தம் தருவது (நம்மை) வறுத்து எடுப்பது மனது தான். மனது என்ற ஒன்று இல்லாவிட்டால் எந்த தாபமும் தெரியாது தானே? *மனம் இறக்கக் கற்றுவிட்டால் தாபமே இல்லை.*

ஆனந்த மயமாகி விடலாம். அப்படி ஆகக் கற்றுக் கொடுப்பதுதான் தத்துவ உபதேசங்கள்.

128. (உலக நாடகத்தில்) வேஷம் போய்விட்டால் நாம் உண்மையில் எந்த நாமாக இருப்போமோ அந்த சத்திய நிலையை அடைய வேண்டாமா? வேஷம் போட்டுக் காட்டும் மனது அழிந்து போய ஆத்மா மட்டும் இருப்பது தான் அந்தி நிலை, சதானந்தநிலை.

129. நாம் ''நிஜம், ரொம்ப ரொம்ப ரொம்ப நிஜம்'' என்று நினைக்கிறதெல்லாம், கதையாகப் போய் விடுகிற நிஜமான நிஜத்தில் (தத்துவ விசாரணைதான்) நம்மை கொண்டு போய் சேர்க்கிறது.

130. அன்பு தான் நல்லதைச் செய்வது. நலனும் இன்பமும் தருவது. லஷ்மிகரம் என்ற சொல்கிற ஒரு நிறைவான அழகைப் பரப்புவது புனிதத்தன்மை என்பதோடு, இணைபிரியாமல் சேர்ந்தது அன்பு. ***ஆசையும், காமும் புனிதமில்லை. அன்புதான் புனிதம் அதனால்தான் அன்பேசிவம் என்று சொல்வது.***

131. ஒரே பரமாத்மா தான் நல்லது, கெட்டது, இரண்டாகவும் இருக்கிறது. என்ற உத்தமமான தத்துவத்தைக் கொண்டது நம்முடைய மதம். உண்மையில் நல்லதும் இல்லை, கெட்டதும் இல்லை. என்னவன்றே வரையறுக்க முடியாத – நாமரூபமில்லாத பரம சத்தியம்தான் பரமாத்மா. அந்த ஏகப் பொருள்தான் மாயையினால் நல்லதாகவும் கெட்டதாகவும் உள்ள சகல உயிருள்ள உயிரற்ற பொருள்களாகவும் தெரிகிறது.

132. கஷ்டம்– கெடுதல் என்பது இல்லாவிட்டால் சம்சார வாழ்க்கை அலுத்தே போகாது. இது வேண்டாம் என்ற எண்ணம் ஏற்படவே ஏற்படாது. உலக வாழ்க்கை முழுக்கவும் சௌக்கியமாகவே இருந்துவிட்டால் இதை விட்டு விட எப்படி நினைப்போம்? இதற்கு பன் மடங்கு பெரிதான ஆத்மானந்தத்தை பற்றி சிந்தையே இல்லாமல் அதற்கு முயற்சியே செய்யாமல் சிற்றின்பப் பிறவிகளாகவே குறுகிக் கொண்டு முடிந்து போவோம்.

133. ''பரமாத்மாவையே நமஸ்காரம் என்று நினைத்து வழிபடுங்கள். அப்போது எல்லா காமங்களும் உங்களை நமஸ்கரிக்க ஆரம்பித்து விடும்'' என்று வேதம் சொல்லியிருக்கிறது (தைத்திரிய உபநிடதம் 3,10...4)

134. இன்றைக்கு உலகத்தில் பலதுறைகளில் பெரிய புத்திமான்களாக பலர் இருக்கிறார்கள். ஆனால் அவர்களையெல்லாம் ஞானி என்று சொல்ல முடியுமா? ''ப்ரம்மம்'' என்ற பரமாத்மாவே 'தான்' என்கிற ஜீவாத்மா என்ற அறிவை அனுபவமாக பெற்றவனைத்தான் 'ஞானி' என்று சொல்கிறது.

135. உலக வாழ்க்கையில் நாம் தர்மம் என்ற செல்வத்தை அடைந்து அதைக் காப்பாற்றி வைத்துக் கொள்ள வேண்டியது தான் இப்போது நமது இலட்சியமாக இருந்தாலும் முடிவாக நம் ஆத்மாவை கடைத்தேற்றிக் கொள்வதற்கு ஞானம் என்ற செல்வத்தை பெற்றாக வேண்டும்.

136. நசித்துப் போகும் தேகமான இந்த அழுதல் பழத்தை மனக்குரங்கு விட்டு விட வேண்டும். அழுகாதபழம் கிடைத்தால் அழுகல் பழத்தை குரங்கு போட்டுவிடும். அழுகாத, மதுரமான பழம் பரமாத்மாதான். அதை மனதால் பிடித்து கொண்டு உடல் நினைப்பை விட்டு விட பயிற்சி செய்ய வேண்டும்.

137. இப்போது கை நாமாகத் தோன்றுகிறது. கால் நாமாகத் தோன்றுகிறது. உடம்பு நாமாகத் தோன்றுகிறது. இதுபோல் உலகனைத்தும் நாமாகி விட வேண்டும். அப்படிப்பட்ட ஞானம் ஒருவனுக்கு அனுபவத்தில் வந்தால் அவன் சண்டாளனாக இருந்தாலும் அவன்தான் பண்டிதன். இந்த ஞானம் தான் மாறாத ஆனந்தமான மோட்சம். இந்த சரீரத்தில் இருக்கும் போதே அனுபவிக்கக்கூடிய மோட்சம்.

138. இன்பம், துன்பம் இரண்டுமே மனதை ஆட்டுவிப்பவை தாம். மனம் ஆடாமல் இருப்பது தான் உண்மை ஆனந்தம். மற்ற இன்பங்கள் எதுவும் நிரந்தரமானவை அல்ல. மனதில் அலை எழாமல் இருக்க வேண்டும். அதே சமயத்தில் அமைதியாக இருக்கிறோம் என்ற பூரண ஞானத்துடன் அப்படி இருக்க வேண்டும். அந்த நிலை வந்துவிட்டால் நமக்கு ஈடு இணை இல்லை.

139. நமக்கு அன்னியமான ஒரு பொருள் உள்ளபோது தான் அதனால் துன்பம், அதனிடம் ஆசை அல்லது பயம், அதன்மீது வெறுப்பு இவை உண்டாக முடியும். இன்னொன்றே இல்லை – காண்பன எல்லாம் ஒரே பரமாத்மா– என்ற அத்வைத ஞானம் அநுபவமாக வந்து விட்டால் அப்புறம் ஆசையும், பயமும், கோபமும், துயரமும் ஏற்பட வழி எது?

140. உடல் நசித்து செத்துப் போன பின்தான் மோட்சம் என்று எங்கோயோ ஒரிடத்திற்குப் ''போக வேண்டும்'' என்பதில்லை. அனைத்தும் ஒன்றே என்ற அத்வைத ஞானம் கை கூடினால் இங்கேயே இபபொழுதே மோட்சத்தில் இருப்போம்.

141. ஆனந்தம் எல்லையில்லாதது. அது இல்லாத இடமில்லை. ஞானம் எல்லையில்லாதது. அதுவும் இல்லாத இடமில்லை. எல்லையில்லாத, எங்கும் நிறைந்த பொருள் இரண்டு இருக்க முடியாது. ஆகையால் ஆனந்தமும் ஞானமும் ஒன்றே. உபநிடத்தின் ''ஆனந்தம்''

தான் ''பிரம்மம்'' என்று சொல்லியிருக்கிறது. ஆனந்தம், ஞானம், பிரம்மம், ஆத்மா எல்லாம் ஒன்றே.

142. மனம் கட்டுப்படுகிற வரையில் எல்லோரும் பல்வகைப்பட்ட பைத்தியங்களே. அழுக்குடைய கண்ணாடி ஆடுவது போல நமது சித்தம் குறைகளோடும் ஒருமுகப்பாடும் இல்லாமல் இருப்பது தான் இதற்குக் காரணம். குறைகள் போனால் ஒருமுகப்பாடு வரும். ஒரு முகப்பாடு வந்தால் உண்மை விளங்கும்.

143. ஆனந்தம் என்பது எங்கும் பரிபூரணமாக நிறைந்திருக்கும்படியான பொருள். ஆனால் நம்முடைய கெட்ட செயல்கள் மனம், புத்தி இவற்றினால் அது நம்மிடம் படாமல் மறைந்திருக்கிறது.

144. என்றோ ஒருநாள் நாம் ஆசைப்படும் பொருள்கள் நம்மைவிட்டுப் பிரிவது அல்லது நாம் அவற்றை விட்டுப் பிரிவது சர்வ நிச்சயம். சாவின் முலம் இந்தப் பிரிவு ஏற்படாமல் அதற்கு முந்தி நாமாக ஆசைகளை விட்டு விட்டால் அத்தனைக்கத்தனை ஆனந்தமாக இருக்கலாம்.

145. நாம் உண்மையில் யார் என்பதை உணரும் ஞானம் வரும்போது நாமே ஞான மயமான ஆனந்தம் என்று கண்டு கொள்வோம்.

146. வெளிப் பொருள்களிவருந்து நமக்கு ஆனந்தம் வரவில்லை.

நம்மிடமிருந்தே தான் ஆனந்தம் பிறக்கிறது.

147. மாயைக்கு ஆளான ''நான்'' என்பதன் சம்பந்தத்திற்கே இத்தனை ஆனந்தம் இருக்கிறது என்றால் எதிலும் சம்பந்தப் படாத பூரண ஞானமாக இருக்கிற அந்த வெறும் 'நான்' எத்தனை ஆனந்தமயமாக இருக்கும்!

148. ஞானியே உள்ளது உள்ளபடி பார்க்கிறான். ஒரே சர்க்கரையினால் பல பொம்மைகள் செய்திருக்கிறது போல ஒரே பிரம்மம் இத்தனையும் ஆகியிருக்கிறது.

149. நமக்கு அந்நியமான வெளி விஷயங்களிலிருந்து ஆனந்தத்தை சம்பாதித்துக் கொள்வது நடக்காத காரியம். இது சாந்தியைக் கெடுக்கிற முயற்சி தான்.

150. வெளிப்பொருள் ஏதோ கிடைக்காததால் நமக்கு குறை வந்துவிட்டதாக துக்கப்படுவது சுத்த தப்பு. நமக்கு குறையே இல்லை. நமக்குள் நாமே பூரண பொருள். நமக்கு அந்நியமாக வெளி என்றே ஒன்று இல்லை. வெளியிலே இருக்கிற அத்தனை ஆனந்தமும் நமக்குள்ளேயே அடக்கம்.

151. இதற்கு மேல் ஒன்று வேண்டும் என்று தோன்றச் செய்யாத நிலைத்த பேரின்பமே மோட்சம். அது தான் வீடு. வீடு என்பதற்கே விடுதலை என்று தான் அர்த்தம்.

152. உடம்பு நமக்கு சிறை. நம் உண்மையான வீடு ஆனந்தமான மோட்சம் தான். நாம் சிறையை விட்டு சொந்த இடத்தில் இருக்க வேண்டும். விடுதலையாகி இறைவனுக்குள் போய் இருக்கிற நம் உண்மையான வீட்டை அடைய முயலவேண்டும். அந்த வீடுதான் எல்லையற்ற இன்பம். உலகில் காலம், தேசம், பொருள் இந்த மூன்றிலும் நிறைந்து இருக்கும் பேரின்பம்.

153. கோபத்திலே பல பாபங்களைச் செய்கிறோம் கோபத்திற்கு காரணம் ஆசை, காமம். முதலில் காமத்தை, ஆசையை ஒழிக்க வேண்டும். பற்றை நிறைய வளர்த்துக் கொண்டு காரியம் செய்யாமல் இருப்பது என்பது முடியாது. பற்றை ஒழித்துவிட்டால் பாபம் செய்யாமல் இருக்கலாம்.

154. புலன்களுக்கு சுகத்தைக் காட்டி விட்டால் போதும். அது மேலே மேலே கொழுந்து விட்டுக் கொண்டு ஆசைகளைப் பெருக்கிக் கொண்டேபோகும்.

155. பிறரது குறைகளை வெளிப்படுத்தக்கூடாது. அவர்களிடம் உள்ள நல்ல அம்சங்களையே வெளிப்படுத்த வேண்டும் தேய்ந்து போன சந்திரகலைக்கும் கூட குளுமையும் பிரகாசமும் இருப்பதால் அதைப் பரமசிவன் தம் தலையில் தரித்து உலகமெல்லாம் பார்த்து புகழும்படி செய்கிறார்.

156. நிறைவேறாத ஆசையின் இரண்டு உருவங்கள் தான் துக்கமும் கோபமும்.

157. "எல்லாம் நாம் தான்" என்கிற ஞானம் வந்து விட்டால் எதனிடமும் பயம் இராது. அந்த ஞானத்திற்குப் பிறகு உடல் விழுந்தால் இன்னொரு உடல் எடுக்க மாட்டோம். இந்த ஞானத்தை அடைகிற மார்க்கங்கள் மனிதனுக்குத்தான் இருக்கின்றன. மிருகங்களுக்கு இல்லை.

158. மனது நன்றாக இருந்தால் தான் சீலம் வரும். கெட்டது என்பதே மனதில் புகாதபடி நல்லதே உள்ளம் முழுதும் நிரம்பியிருந்தால் தான் சீலம் வந்ததாக அர்த்தம்.

159. காயாக இருக்கும் போது மரமும் காயை விட்டுவிட விரும்பவில்லை; காயும் மரத்திலிருந்து விடபட விரும்பவில்லை. ஆனால் நிறைந்த மதுரமாக ஆகிவிட்டால் தானாகவே பற்றும் போய் விடும். பழம் தானே இற்று விழுந்து விடும். மரமும் பழத்தை விடுகிறது. பழமும் மரத்தை விடுகிறது. இரண்டும் ஆனந்தமாகப் பிரியும்.

படிபடிப்படியாக வளர்ந்து மனம் மதுரமயமான ஒவ்வொருவனும் இப்படியே ஆனந்தமாக சம்சாரம் என்னும் மரத்திலிருந்து விடுபட்டு விடுவான்.

160. ***உடலுக்கு ஒளியளிப்பது கண். உயிருக்கு ஒளி தருவது ஞானம்.***

161. சுகதுக்கங்களில் சலனமடையாமல் தான் ஆனந்தமாக இருந்துகொண்டு மற்றவர்களுக்கும் ஆனந்தத்தை ஊட்டுவதுதான் யோகம். அப்படியிருப்பவனே யோகி.

162. எல்லோரும் தங்களை மகாபுத்திசாலிகளாகவே காட்டிக் கொள்ளப் பிரியப்படுகிறார்கள். ஆனால் நல்ல புத்தி வேண்டும் என்று அதற்காகத் தாபத்தோடு யாரும் பிரார்த்திப்பதாக தெரியவில்லை. பொதுவாக புத்திசாலித்தனம் என்பது சாமர்த்தியம் என்றுதான் நினைக்கப்படுகிறது. ஆனால் ***ஞானமும் விவேகமும்தான் உண்மையான புத்திமானின் லட்சணங்கள்.***

163. ***அதிருப்தி தான் தரித்திரம்; திருப்தி தான் செல்வம்.***

164. மற்ற காரியங்கள் அவசியமற்றதிலோ, தப்பானதிலோ கூட மனதை நிறுத்துகின்றன என்றால் மகான்கள் வகுத்துக் கொடுத்த அறநெறிகள் நல்ல எண்ணங்களிலேயே மனது போகும்படி செய்கிறது. இது ஒன்று. கெட்டவையான எல்லாவற்றினின்றும் மனதை திருப்பிவிடுகின்றன. இது இரண்டாவது நன்மை.

165. ஆசை நிறைவேறா விட்டால் தான் துக்கம் என்றில்லை. ஆசை நிறைவேற்றத்தாலேயும் துக்கம்தான். ஆசை நிறைவேற்றத்தால் எதைப் பெற்றோமோ அது கையை விட்டுப் போய்விடப் போகிறதே என்ற தாகம். அதோடு பயம்.

166. ஒன்றைப் பெற்று ஆனந்தப்பட்டபிறகு அந்த ஆனந்தம் ஆசையை உண்டாக்கி விடுகிறது. எதிர்பாராமல் தானாகவே ஆனந்தமாக வருகிறவையும் பிற்பாடு அது வராதா, வராதா என்று எதிர்பார்க்க வைக்கிற ஆசையை ஏற்படுத்தி விடுகிறது.

167. பாப உருவமெடுத்து பழி வாங்குவதில் முக்கியமானது பொய். ஆசைதான் இப்படி பல பொய்களை அடுக்க வைக்கிறது. பொய்க்கும் வித்து ஆசை தான்.

168. எப்பேர்பட்ட ஆசையாயிருந்தாலும் அது ஒருவித அரிப்புதான். மனதில் அதிருப்தியிருந்து அதனால் ஏற்படுகிற அரிப்புதான் ஆசை என்பது. ***மனதுக்கு எடுக்கிற தாகம்தான் ஆசை.***

169. இந்த மனதை பூராகவும் இறைவனிடமே கரைத்து

இல்லையென்றாக்கிக் கொண்டால் தான் நிலையான பரந்த ஆனநதம் கிடைக்கும்.

170. எல்லா ஆசையுமே அரிப்புதான். ஆசை என்பதே அரிப்பு தான். அதன் பூர்த்திக்காகப் பண்ணுவதெல்லாம் சொறிந்து கொடுத்து புண்ணை *சீழ்பிடிக்கும்படி* ஆக்குவது தான்.

171. ஆசையை அடக்குவது என்பதும் மனதை அடக்குவது என்பதும் ஒன்றுதான். ஏனென்றால் ஆசைகள் முளைக்கிற மூல இடம் மனதுதான். அது அடக்கவே முடியாமல் பலவந்தமாய் ஜீவனை அழைத்துக் கொண்டு போகிறது.

172. தூக்கம், மூர்ச்சை, சமாதி ஆகிய நிலைகளில் ஒருவன் செத்துப் போய் விடவில்லை. உயிரோடு தான் இருக்கிறான். அப்போதும் அவனுக்குள் ஒன்று இருந்து கொண்டிருக்கிறதே அதுதான் ஆத்மா. அதற்குச் சாவே கிடையாது; மாறுதலும் கிடையாது.

173. நம் உடம்பும் மனதும் அழிந்து அழிந்து புதுப்புது உருவம் எடுத்துக் கொண்டேயிருக்கும் போது அத்தனைக்கும் அடிப்படையாக இருக்கிற உயிர்த்தத்துவம் தான் ஆத்மா.

174. உயிர்தத்துவம் என்றால் மூச்சு இல்லை, மூச்சு போன பின்பும் ஆன்மா அழிவதில்லை. மூச்சைக் கொண்டு உடம்பு வாழும் படி செய்யும் உயிருக்குயிரான தத்துவமே ஆன்மா. அதுதான் உண்மையான ''நாம்''. போன நிமிடம் இருந்து இந்த நிமிடம் இல்லாமலாகி விட்ட உடம்போ மனதோ எப்படி நாமாக இருக்க முடியும்?

175. உண்மையில் வெளிப்பொருள்களில் ஆனந்தமில்லை. உள்ளே உள்ள ஆன்ம ஒளியை மாயை பிரதிபலித்து ஜீவனின் புலன்கள் வழியாக அநுபவத்தை கொடுக்கும்போது அந்தப் பிரதிபலிப்பின் கிரணங்கள் தான் வெளிப்பொருளிலிருந்து விடும் ஆனந்தம் போல மாறித் தெரிகின்றது.

176. ஜீவனுடன் மனது கலப்பதால்தான் ஆனந்தம் உண்டாகிறது. மனது எதிலும் கலக்காமல் தூங்கிக் கொண்டிருக்கும்போது எந்த பொருளாவது ஆனந்தம் தருகிறதா?

177. சாந்தம் என்பது என்ன? சலனமில்லாமல் தனக்குள்ளேயே அடங்கி இருப்பதுதான்.

178. *சாவினால் இப்போது உள்ள உடம்பை இல்லாமல் ஆக்கிக் கொள்ள முடியுமே தவிர உடம்பே இல்லாமல் ஆக்கிக் கொள்ள முடியாது*. அதனால் ''உடம்பு நானில்லை'' என்ற ஞானம் தான் தீர்வே தவிர, சாவு அல்ல.

179. சூரியனை இருட்டு எப்படிப் பார்க்க முடியும்? வெளிச்சத்துக்கு வந்தவுடன் தான் இருட்டே அழிந்து போகுமே! இங்கு இருட்டு தானாகத் தன்னை அழித்துக் கொள்வதுமில்லை. அப்படி ஆன்ம ஒளியில் மாயா இருட்டாகிய மனது அழிகிறது.

180. மனதுக்குத் தான் மாத்திரமாகத் தனித்து இருக்கவே தெரியாது எப்போது தன்னிலேயே நிற்கிறதோ அப்போது தானே இல்லாமல் ஓடிப் போய் விடும் ஆன்மா மட்டும்தான் அதற்கப்புறம் பிரகாசிக்கும்.

181. ***மனது அதுவேதான் சிந்திக்கிறது என்றாலும் இது இன்னொன்றைக் குறித்தே தான் இப்படி சிந்தனைகளைச் செய்யக்கூடியதாய் இருக்கிறது***. வேறொன்றையும் குறிக்காமல் சிந்திப்பது என்பது மனதுக்குத் தெரியாத காரியம்.

182. தனியாகத் தன்னை இன்னவென்று பார்த்துக் கொள்ள முயற்சி பண்ணினால் மனதுக்குத் "தான்" என்றே ஒன்று இல்லை என்றுதான் தெரியும்.

183. மனதின் இயல்பும் ஆன்மாவின் இயல்பும் ஒன்றுக் கொன்று முழுக்க எதிர் மறையாக இருக்கிறது. மனதுக்கு தன்னைத் தெரியாது. தனக்கு வேறான பொருள்கள்தான் அதற்குத் தெரியும். ஆன்மா தன்னை மட்டுமே தெரிந்து கொண்டிருப்பது. வேறு பொருள்களே அதற்குத் தெரியாது. ***மனது த்வைதம்; ஆன்மா அத்வைதம்.***

184. கவலை, குறை மட்டும்தான் பாரம் என்றில்லை. தன்னைப் பற்றிய பெருமை கூடப் பெரிய பாரம்தான் சொல்லப் போனால் இதுதான் பெரிய பாரம்.

185. இலட்சியத்தில் நேரே சேர்ப்பது ஞான யோகம். அந்த பிரதான சாலைக்கு கொண்டு விடும் சாலைகள் தான் கர்ம யோகம். அதற்கு பல பிறவிகள் பிடித்தாலும் பிடிக்கும் ஆனாலும் ஒருநாள் கொண்டு விட்டு விடும்.

186. ஞானந்தான் நிலைத்து நிற்கும் மோட்சத்தைத் தருவது.

187. தூக்கத்திலேயும் மயக்கத்திலேயும் உன் மனது இல்லாமல் போயிருந்தாலும் உயிரோடுதான் நீ இருந்தாய். அந்த உயிரைத்தான் ஆத்மா என்பது. அதுதான் நிஜமான நீ. அதற்கு இரண்டாவது ஆசாமியாக மனது என்ற ஒன்றே மாயையைக் கொண்டு வந்து விட்டிருக்கிறது.

188. கிரகங்கள், நட்சத்திரங்கள், சூரியன் எல்லாமே பயணம் செய்த வண்ணம் இருக்கின்றன. அப்படி இந்த மகான்களும் உலகத்திற்கு ஞானப்பிரகாசத்தை கொடுத்தபடி பயணம் செய்தபடியே இருக்கிறார்கள்.

189. சும்மாயிருப்பது தான் இலட்சியம் என்றாலும் அதிலே நாமே போய் உட்கார முடியாது. தாம் சரியாக அடிப்படையிலிருந்து ஆரம்பித்து மேலேறிப் போனால் அதுவே ஒரு கட்டத்தில் தம்மை சும்மாயிருக்க வைத்துவிடும். மற்றபடி நாம் சொல்லும் ''சும்மா'' எல்லாம் சும்மா சொல்லும் 'சும்மா'தான்

190. பனிக்கட்டியும் ஸ்படிகமும் ஒரேமாதிரிதான் வெளிப்பார்வைக்கு இருக்கின்றன. ஆனால் பனிக்கட்டிதான் உருகி உருகி நீராகுமோ தவிர ஸ்படிகம் நீராகாது. ஏனென்றால் எது நீராக இருந்து அப்புறம் உறைந்து வேறு உருவத்தில் இருந்ததோ அது தான் உருகி மறுபடியும் தன் சுயமான உருவத்தை அடையமுடியும். பிரம்மமே ஜீவனாக உறைந்து போயிருப்பதால் தான் இந்த ஜீவாத்மாவும் உருகிப்போனால் ப்ரும்மமாகவே அநுபவத்தில் ஆக முடிகிறது.

191. புலன்கள் ஒன்றை அழகானதென்று அறிவதுதான் ஆசைக்குக் காரணம்.

192. நம்மிலும் வேறாக ஒன்று இல்லாமல் எல்லாவற்றையும் நாமாகப் பண்ணிக் கொண்டால் ஆசை உண்டாகாது.

193. *நமக்கு பொருளாகத் தோன்றுவதெல்லாம் பொய். இந்தத் தோற்றங்களுக்கெல்லாம் ஆதாரமான பொருள் ஒன்றே மெய்.*

194. ஒன்று இன்னான்று மாதிரி தோன்றி ஏமாற்றுவதற்குத் தான் ''மாயா சக்தி'' என்று பெயர்.

195. ஞானம் வந்தால் மாயை போய் விடுகிறது. விவகாரமாகப் பார்க்கும் உலகம் நிஜமே. ஞான தசையில் அது மறைந்துவிடும்.

196. துக்கம், பிரியம் எதனால் உண்டாகிறது? இரண்டு என்ற நினைப்பதால்தான். நமக்கு இன்றொன்றாக இருப்பதில் தான் பிரியமும் துக்கமும் பயமும் உண்டாகிறது. இறைவனே இப்படி வேறாக இருந்தாலும் இவை உண்டாகும். ஆகவே அவரே நாமாகிவிட்டால் துக்கமே இல்லை. பயமே இல்லை. ஆசை வெறுப்புகளுக்கு இடமே இல்லை. இப்படி இரண்டற ஆகிவிட்டால் தான் அதுதான் உண்மையான விடுதலை.

197. பொதுவாக உத்தமமான இன்பத்தில் மூச்சு வலது நாசித் துவாரத்தில் வரும். வெறும் புலன் இன்பம் என்றால் இடது நாசித் துவாரத்தில் வரும். இத்தனை உணர்ச்சிகளுக்கும் ஆதாரமான பொருளில் தியானம் வலுவாகிற போது ஒரேசீராக, மிக மெதுவாக இரு நாசிகளிலும் சமமாக மூச்சுவரும். தியான லட்சியத்தில் ஒன்றுபட்டு விடுகிற போது மூச்சே நின்றுவிடும். மனதும் நின்று விடும். ஆனால் உயிர் இருக்கும். ஞானம் என்ற பேருணர்வு பூரித்து இருக்கும்.

198. வெறும் ஆன்மிக நடைமுறைக் கடமைகளை மாத்திரம் செய்து கொண்டு, இறைவனை எவனொருவன் உணராமல் இருக்கிறானோ அவன் நெருப்பில் விறகைப் போட்டு புகையை மட்டும் எழுப்பிக் கொண்டிருக்கிறான். அவன் மூடன். அவன் ஆத்ம சொரூபத்தை ஒருநாளும் அறிந்து கொள்ளமாட்டான்.

199. சித்தம் ஒரே சஞ்சலமாக நாலாபக்கங்களிலும் பாயாமல் ஒன்றிலேயே ஈடுபட்டிருந்தால் பூதக் கண்ணாடியில் சூரிய கிரணங்கள் ஒருபுள்ளியில் குவிந்து சேரும் போது அடியில் இருக்கிற காகிதத்தில் தீப்பொறி உண்டாகிறதைப் போல சித்த மலத்தை எரிக்கிற பொறி உண்டாகிறது.

200. நெருப்பிலே பெட்ரோலை விட்டு அணைத்து விடலாம் என்று நினைக்கிற மாதிரி தான், புதுப் புது சாதனங்களைக் கண்டு பிடித்து நம் ஆசையை பூர்த்தி செய்து கொண்டு விடலாம் என்று நினைப்பதும்.

201. சலனம் இருந்தால் சாந்தி இல்லை. சாந்தி இல்லாமல் இருப்பதுதான் போராட்டம்.

202. ***மாயையை விட்டு ஞானி விலகுவதில்லை. ஞானியை விட்டே மாயை விலகுகிறது.***

203. உலகத்தில் ஒருவன், இருக்கிறமாதிரி தோன்றும் போதே ஞானம் வந்து மாயை விலகி, தன் மனதின் வேலை அடங்கிப் போய ஆத்மாநுபவத்திலிருந்து கொண்டிருப்பது தான் ஜீவன்முக்தி என்பது.

204. மனது என்பதிலிருந்து ஆத்மா விடுபட்ட நிலையே மோட்சம். அது இங்கேயே இப்போதே சித்தித்தாலும் சித்திக்கும் ஆகையால் செத்துப்போன அப்புறம்தான் மோட்சம் என்றில்லாமல் சரீரத்தில் உயிர் இருக்கும் போதே முக்தனாகலாம்.

205. ஞானி என்று நாம் பார்க்கும் ஒருவன், நம்கென்னவோ உலகத்தில் இருக்கிறார்ப்போல தெரிந்தாலும், உண்மையில் அவன் மோட்சத்தில்தான் இருக்கிறான்.

206. ஞானவான் என்பவன் ''ஜீவாத்மா எனப்படுபவனின் ஆத்மா உண்மையில் ப்ரம்மமே தான்'' என்று படிப்பறிவாலும் கேள்வி அறிவாலும் நன்றாகத் தெரிந்து கொண்டு அதைச் சொந்த அநுபவமாக்கிகொள்ள முயற்சி பண்ணுகிறவன். இவன் சாதாரண மக்களுக்கு மேலே போன சாதனை செய்தவன். (ஆனால்) ஞானி என்பவனே அந்த சொந்த அநுபவத்தை பெற்றறே விட்டவன். உச்சி சிகரத்தையே பிடித்து விட்டவன்.

207. பொய் ''நானை ''போகப் பண்ணி நிஜ ''நானாக'' இருப்பது மிகவும் சிரமமான காரியம். பொய் ''நான்'' தான் மாயா சிருஷ்டியான மனது. நிஜ ''நான்'':தான் சத்தியமான பிரம்மம்.

208. ஆத்மா விஷயமாக ஒருவன் ஈடுபட வேண்டுமானால் அதற்கு அடிப்படையாக இருக்க வேண்டியது என்ன? அந்த ஆத்மா ஒன்றுதான் நிலையானது. மற்றதெல்லாம் நிலையற்றது என்ற அறிவுதான்.

209. நிலையானது, நிலையற்றது எது? என்று பகுத்தறிந்து சீர்தூக்கி பார்ப்பதுதான் ஆத்ம சாதனையின் முதல்படி

210. ஞானம் வந்து விட்டால் அப்போது எல்லாவற்றிடமும் அன்பு ஏற்பட்டுவிடும். ஏனென்றால் அப்போது எந்த பெரிய, கெட்ட சபலப் பொருளும் அவனைக் கலக்காது.

211. 1) பார்க்கிற, கேட்கிற எல்லாவற்றிலும் ஆசையை விடுவது 2. கேட்டதில் கேட்கப்போவதில் ஆசையை விடுவது 3. பார்த்ததில் பார்க்காததில் ஆசையை விடுவது, எல்லாவற்றையும் கூட்டிப் பார்த்தால் – ஒரு மனித மனதில் இடம்பெறக் கூடிய அத்தனை ஆசைகளையும் தொலைத்து முழுகுவதுதான் வைராக்யம்.

212. விவேகமில்லாத வைராக்யமும் சரிவராது, வைராக்கிய மில்லாத விவேகமும் சரி வராது. இரண்டும் சேர வேண்டும்.

213. அடங்கின மனது எங்கே (நிலைத்து) நிற்கிறதோ அந்த ஸ்தானம்தான ஆத்மா. மனது நின்று போனால் ஆத்மா பிரகாசிக்கும்.

214. சாதனை அத்தனையும் பண்ணுவது, மனது பரிபூரணமாக சுத்தமாகி, அப்படியே அழி (வு) பட்டுப் போவதற்குத்தான். மனது அழிபட்டுப் போவதென்றால் ஆசை அழிபடுவது தான்.

215. தற்போது நாம் தவம் என்று நினைப்பதில் உண்மையில் சுகமில்லை. ஞானம் ஒன்று தான் தவம்.

216. ''நல்லது, நல்லது'' என்று இங்கு சொன்னதெல்லாம் ஆத்மாவுக்கு அந்தரங்கமான நல்லதை அல்ல. உலக வாழ்க்கையில் நல்லதாகத் தெரிவதைத் தான். அப்படி தெரிந்து அதிலேயே கட்டிப் போட்டு ஆத்மாவின் பக்கம் போகவிடாமல் பண்ணுபவைகளைத் தான்.

217. ஆன்மா இன்னதென்று எந்த விதமான அநுபவமும் இல்லாதவனை விட பக்தி என்ற நல்ல விஷயம் நிரம்பிய சுத்த மனதையே ஆத்மா என்று நினைத்துக் கொண்டிருப்பது மேல்.

218. நாம் கற்பனையாக இல்லாமல் இருக்கும் எல்லா பொருள்களையும் பொருள்கள் என்று சொன்னாலும், ஞானம் வரும்

பொழுது அவை, அத்தனையும் மாயா கற்பனைதான் மாயையால் கற்பனை செய்யப்பட்டவை தான் – என்பதாக அடிபட்டுப் போய்விடும். சத்தியமாக உள்ளது 'ஸத்' என்றும் மெய்ப்பொருள் என்று சொல்லப்படும் பிரம்மம் ஒன்றுதான் என்பதாக அப்போது நிற்கும்.

219. மாயை கலக்காதது ப்ரம்மம் ஒன்றுதான். அனைத்து உலகத்திற்கும் ஆதாரமாக வைத்துச் சொல்லும் போது எந்தத் தத்துவத்தை ப்ரம்மம் என்கிறோமோ அதையே ஒரு ஜீவனுக்கு ஆதாரமாகச் சொல்லும் போது ஆன்மா என்பது. ஆன்மாவாகிய அந்த பிரம்மம் ஒன்றுதான் மாயையின் கலப்பற்றது.

220. சித்தம், மனது, புத்தி, அகங்காரம், இந்த நான்குக்குப் பொதுவாக உள்ள எண்ணம், என்பதற்குப் பிறப்பிடமாக இருப்பது சித்தம். எண்ணுவதான இந்த சித்தம் மற்ற மூன்றுடனும் சேருவது. மனது என்பது உணரும் கருவி. அதற்கு நல்லது கெட்டது தெரியாது. புத்திதான் இதில் நல்லது கெட்டதை சீர் தூக்கிப் பார்க்கிறகருவி. அகங்காரம் என்பது எல்லா எண்ணங்களுக்கும் முதலாவதாக ''நான்'' என்கிற பாவம்.

221. ஞானியின் பிராணன் இறப்பின் போது வெளியே எங்குமே போகிறதில்லை. எங்கேயோ போய் அடைய வேண்டிய மோட்சம் என்ற ஒன்று அவனுக்குக் கிடையாது. அதே மாதிரி எங்கேயோ ஒரு காலத்தில் மரணம் என்பது ஏற்படும் காலத்திற்குப் பிறகு தான் அவனுக்கு மோட்சம் என்பது இல்லை. என்றைக்கு ஞானம் வந்ததோ அப்போதே பந்தங்களே ஏற்படுத்தும் ஜீவ மனது நசித்து அவன் மாயை யாலிருத்து விடுபட்டு விடுவதால் முக்தனாக, ஜீவன் முக்தனாக ஆகி விடுகிறான்.

222. ஞானியின் சரீரம் சாகிறபோது அவனுடைய பிராணன் எந்த நாடி வழியாகவும் வெளியே போகவில்லை. ஏற்கனவே எப்படி அகங்காரம் இருதயத்திற்குள் போய் அஸ்தமனத்தில் ஒடுங்கிப் போயிற்றோ அப்படியே இப்போது மரணம் நேருகிறபோது பிராணனும் அதற்குள்ளேயே போய் தான் ஒடுங்கிவிடுகிறது.

223. கேட்ட உபதேசத்தைவிடாமல் மனனம் செய்து அர்த்தத்தைக் கண்டு கொண்ட பிறகு அந்த அர்த்தம் ஒன்றிலிலேயே மனதை இடைவிடாமல் ஈடுபடுத்தி நிற்பதே தியானம் ஆகும்.

224. ஆத்மாவை தெரிந்து கொள்ள வேண்டுமெனில் அதே குறியாய், காரியமாய், சிந்தையாய் இருந்தால்தான் முடியும். மற்றப் பற்றுகள் காரியங்களையும் வைத்துக் கொண்டு இதையும் பண்ணுவது என்றால், அந்த மாயையும் இந்த ஞானமும் எப்படி ஒரே சமயத்தில் சேர்ந்து வரும்?

225. வாக்கால் வர்ணிக்கமுடியாத, மனதால் பிடிக்க முடியாத அதைவிட ஆனந்தமில்லை, சாந்தமில்லை, சுதந்திரமில்லை என்றிருக்கும் அகண்டமான ஏகப் பொருளாக இருக்கும் சத்திய சத்தியமான, நித்ய நித்தியமான நிலை தான் ஞான நிலை.

226. ***காரியமில்லாத பிரம்மம் தான் சிவன். காரியம் பண்ணு கிற பிரம்மம் சக்தி.***

227. அறிவதே உணர்வதாக, அதாவது அறிவதே அநுபவிப்பதாக இருப்பது தான் ஞானம்.

228. ''கர்மா'' என்கிற கயிறு 'பசு' என்னும் மனிதனை பிறவி என்ற முளையோடு கட்டிப் போட்டிருக்கிறது. அந்தக் கயிறு தான் பாசம். இவனுடைய ஆசை என்பதே தான் இப்படி பாசமாக அவனை சம்சார சக்கரத்திலேயே சுற்றிச் சுற்றி வரும்படி செய்கிறது. ஞானம் என்கிற கத்தி அந்தக் கயிறைத் துண்டித்து ஜீவாத்மப் பசுவை பிறவிச் சுழலிலிருந்து விடுவித்து வீடு அருளுகிறது. அப்போது அவன் பசுவே இல்லை. பசுபதியான சிவமே ஆகிறான்.

229. ஞானத்தில் போனால் முழுமையான நிலை 'தானே ''பரமாத்மா'' என்று தெரிந்து கொள்கிறது. பக்தியில் போனால் முழுமை நிலை'' தானே இல்லை'' என்று சரணாகதியில் அழித்துக் கொண்டுவிடுகிறது. இப்படி ஜீவாத்மாவாக ஒருவன் இல்லாமலாக்கிக் கொண்டவுடன், வெற்றிடத்தில் காற்று நிரம்பிக் கொண்டுவருகிறாப் போல பரமாத்மாவே அங்கு நிறைந்து ஞானத்தில் ஏற்பட்ட அதே ப்ரம்மானந்தம் இங்கேயும் ஏற்படுகிறது.

230. இதற்கு மேல் ஒன்று வேண்டும் என்று தோன்றச் செய்யாத நிலையான இன்பமே மோட்சம். இது தான் வீடு. இது தான் நிலையான, உண்மையான, நமக்கு சொந்தமான வீடு.

231. ஆசையை அடைவதற்கு குறுக்கு வழிகளில் போகிறோம். அது பாபம். அதாவது ***பாபம் செய்யக் காரணம் ஆசை.***

232. பணத்துக்காக பறக்காத போது இறைவன் புகழ்பாட நிறைய நேரம் இருக்கும். வாழ்க்கையில் நிம்மதியும் திருப்தியும் சௌபாக்கியமும் தன்னாலே உண்டாகும்.

233. போட்டி இருக்கிற வரையில் மனநிறைவு யாருக்கும் உண்டாகாது.. போட்டி போக வேண்டுமானால் போட்டிபோட இன்னொரு பொருளே இல்லை என்ற ஞானம் வரவேண்டும்.

234. மனத்தை உள்ளே இழுத்து ''உள்ளுக்குள்ளே உனக்கு அடி ஆதாரமாக ஒரு காரியமும் இல்லாமல் இருக்கும் ஆத்மாவை நினை'' என்று பழக்கிக் கொண்டே இருந்தால் தான் அது அப்படியே நினைத்து,

நினைத்து, களைத்து விழுந்தபோது அதே அந்த ஆத்மா மட்டும் பிரகாசித்துக் கொண்டு விளங்கும். நிலையான அமைதியான இன்பத்தை அனுபவிக்கலாம்.

235. ***மனநிறைவினால் ஏற்படும் நிம்மதி இல்லாமல் உண்மையான நலன் என்பது இல்லவே இல்லை.***

236. ஒவ்வொரு புலனும் கொடுக்ககூடிய அனுபவங்களின் ஆசையால் தான் ஜீவன் இந்த மாயா லோகத்தில் கட்டிப் போடப்படுகிறது. இவற்றை அடக்கி வைத்தால் தான் ஆத்மா லோகத்தில் சேரலாம். அப்படி அடக்குவதுதான் தமம், ''சமம்'' என்பது மனவடக்கம்; ''தமம்'' என்பது புலனடக்கம்.

239. உயர்ந்த சமாதி நிலையை ஒருவன் அடைந்துவிட்டால் அந்த சமாதி நிலையில் அதை அப்படியே அனுபவித்துக் கொண்டிருப்பானே தவிர சுய முயற்சியாக சாதனை என்று எதையும் பண்ணமாட்டான். பண்ண முடியாது. பண்ண வேண்டிய அவசியமுமில்லை.

238. ப்ரம்மத்திற்கு வேறாகத் தான் தனி ஆசாமி என்று ''நான்'' போட்டு நினைக்கிற நினைப்புதான் அகங்காரம் அதுதான் சிவன் ஜீவனாக உருவாவதின் பிள்ளையார் சுழி!''

239. அறம் பொருள், இன்பம், வீடு என்ற நான்கு வாழ்க்கைப் பயன்களில் இன்பத்தை மட்டும் தேடி அதற்காகப் பொருளுக்கு அலைந்து கொண்டிருக்கிறோம். இதை மாற்றி வீட்டிற்காக, அறத்தின் (தர்மம்) மூலம் பாடுபட வேண்டும். வாழ்க்கையை எளிதாக்கிக் கொண்டால் பொருளுக்காக அலைய வேண்டாம். அப்போது அறங்களைப் பின்பற்ற முடியும்.

240. விடுபடுவதைத்தான் ''வீடு'' என்று சுருக்கிச் சொல்கிறார்கள் எதிலிருந்து விடுபடுவது? சம்சாரத்திலிருந்து விடுபடுவது தான் முக்தி! மறுபடி மறுபடி பிறந்து கொண்டும் இறந்து கொண்டும் இல்லாமல் நித்தியமாகிய சத்திய நிலையை அடைவது தான் முக்தி.



## ஆதி சங்கரர் வாக்கு

*பணம் பணம் என்று அலையும் முன் பிறவியில் செய்ததான தருமங்களுக்கேற்ப, இப்பிறவியில் உனக்குச் செல்வம் வருகின்றது. இவ்வாறு வருகின்ற செல்வத்துடன் திருப்தி அடை. பேராசையால் மனத்தைக் குழப்பிக் கொள்ளாதே*



# கல்வி, கலாச்சாரம்

241. அறிவை வளர்த்துக் கொடுக்கும் போதே கெட்டதற்கு அந்த அறிவு பயன்படுத்தப்படாமல் தர்ம வழியிலேயே போய் நல்லதைச் செய்யும்படி வழி பண்ணித்தருகிறவரே குரு.

242. நல்வழிப்படுத்துவது என்பது தானே குருவின் முக்கியமான காரியம்? ஆகையால் அம்மாவுக்கும், அப்பாவுக்கும் குரு ஸ்தானம் உண்டு.

243. பெற்றோர்கள் பாசத்தால் பாதி, கடமை என்று நினைத்துக் பாதி, இப்படிச் செய்வார்கள். குரு என்றே இருப்பவருக்குத் தான் நல்வழிப் படுத்துவதொன்றே கார்யமாக முழுக்கடமையாகக் கொடுத்திருக்கிறது.

244. இதயத்தை அடியோடு புறக்கணித்து விட்டு மூளைக்கு மட்டுமே சரக்கு ஏற்றுகிறதே கல்வி முறை என்பது தான் நிகழ்கால இழி நிலை.

245. ***நிஜமான கல்வி என்பது அறிவை மாத்திரம் வளர்ப்பதோடு நின்றுவிடாமல் நற்குண வளர்ச்சிக்கும் வழி செய்ய வேண்டும்***. என்று ஆசிரியர்கள் உணர வேண்டும்.

246. கல்வித் 'தரம்' பாடத்திட்டத்தோடு முடிந்து விடும் விஷயமில்லை. வாழ்க்கையில் நற்குணமுள்ள நல்ல மக்களை உண்டாக்க வழி செய்தாலே கல்வியானது உண்மையான தரத்தைப் பெற்றதாகும்.

247. சொல்லும் உட்கருத்தைப் புரிந்து கொண்டு சொன்னால் தான் கேட்கிறவர் மனதிலும் அது நன்றாகப் புகுந்து முழுப் பலனையும் கொடுக்கும்.

248. நம் கை நிறைய, பைநிறைய காசு இருந்தாலும் உண்டியலில் அப்படியே கொட்டி விடமுடியுமா? துவாரத்தின் வழியே ஒவ்வொரு காசாக சிக்கிக் கொள்ளாமல் உண்டியைக் குலுக்கித்தானே போடவேண்டும்? அப்படித்தான் ஒவ்வொரு விஷயத்தின் ஒவ்வொரு அம்சத்தையும் ஒவ்வொன்றாக மாணவர்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்களுக்குள்ளே போய்விட்டதா என்பதை கேள்வி கேட்டு நிச்சயப்படுத்திக் கொண்டு, அப்புறம் தான் அடுத்த அம்சத்திற்குப் போக வேண்டும்.

249. சாத்திரப் படியான ஒழுக்கத்தை, இன்னும் அதற்கு மேலே ஆத்ம சாத்திர லட்சியமான அநுபவத்தையே தன்னுடைய வாழ்க்கை உதாரணத்தால் உலகத்திற்குக் கண்கூடாகக் காட்டுகிறவனே முழுமையான ஆசாரியன்.

250. ஆசாரியன் தான் என்ன போதிக்கிறானோ அதைத்தானே பண்ணிக் காட்ட வேண்டும். தன் வாழ்க்கையாலேயே உதாரணம் படைக்க வேண்டும். சொல்கிறபடி அந்த குருவே செய்து காட்டினால்தான் அவன் சொல்கிறதற்கு உயர் சக்தி உண்டாகி கேட்கிறவனையும் அந்த வழியில் போகச் செய்யும்.

251. இரண்டு கருத்துக்கள்; ஒன்று, தகுதி உள்ளவன் மரியாதை முறைப்படி வந்து கேட்டால், தெரிந்தவன் சொல்லிக் கொடுத்தே ஆக வேண்டும். இன்னொன்று, தெரியாதவன் ஒருகாலும் தெரிந்ததாகப் பொய் பண்ணிவிடக்கூடாது.

252. தகுதியை நன்றாகத் தெரிந்து கொண்டு தான் குரு என்று ஒருவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். அப்புறம் அவரிடமே தான் சரணாகதி என்று இருக்க வேண்டும்.

253. ''வித்யார்த்தி'' என்று மாணவனுக்கு பெயர் சொல்வதற்குக் காரணம் வித்யையே அர்த்தமாக, அதாவது கல்வியையே செல்வமாக நினைத்து அவன் மேலும் மேலும் பலவிஷயங்களைக் கற்றுக் கொண்டு அந்தச் சொத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டியவன் என்பது தான்.

254. சின்ன வயதில் உள்ளத்திற்கு போதிய சக்தி ஏற்படு முன்பே (மாணவர்கள்) படிப்பைத் தவிர மற்ற விஷயங்களை மேற்கொண்டால் உள்ளத்தில் வியாதிதான் உண்டாகும்.

255. ***அறியாமை என்கிற வியாதி படிப்பு என்கிற மருந்தினால் போகிறது***.

256. பணிவு இல்லாமல் படிப்பில் மட்டும் தேர்ச்சி பெற்றால் எவரும் முழுமனிதனாக ஆக முடியாது. ''நமக்கு எல்லாம் தெரியும் நாம் தான் புத்திசாலி' என்று அகம்பாவம்தான் வெறும் படிப்பினால் உண்டாகும்.

257. பத்தியம் இல்லாமல் மருந்து மட்டும் பலன் தராது. (உங்களுக்கெல்லாம்) படிப்புதான் மருந்து என்றால் அதோடு சேர்த்துக்கொள்ள வேண்டிய பத்தியம் பணிவு என்பதே.

258. கல்வி கற்கும் நாளில் அடிநிலையில் அடங்கியிருந்தால் பிற்பாடு வாழ்க்கைக்குப் பொறுப்பெடுத்துக் கொள்ளும் நாளில் உயர்ந்த நிலையைப் பெறலாம்.

259. உள்ளத்தில் எவ்வளுக் கொள்ளவும் அமைதி நிலவுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு இன்பம் மேலிடுகிறது என்பது உண்மையான அனுபவம். மன அமைதியின் உயர்நிலையை அளிப்பதே உண்மையான கல்வியாகும்.

260. உண்மையான கல்வி என்பது ஆத்ம ஞானம் அடைய உதவுவதேயாகும். ஆத்மஞானத்தாலேயே மக்கள் இறவாப்புகழ் அடைகிறார்கள். எதற்கு மேலாக ஒரு பயன் உலகில் இல்லையோ அந்தப் பயனை உண்மைக் கல்வி அளிக்கிறது. மற்ற விதமான கல்விப் பயிற்சிகளெல்லாம் உலகப் பயன்களைத்தான் அளிக்கின்றன.

261. (பள்ளியில்) படித்து வெளிவந்தவர்கள் யோக்கியர்களாக இல்லாவிட்டால் பள்ளிக்கூடம் வைத்த பயன் நமக்கு ஏது? பக்தி, கட்டுப்பாடு, தியாகம் முதலியவை இல்லாமல் படிப்பால் பெறும் புத்தியை மட்டும் வளர்த்துக் கொண்டால் சாதுரியமாக அயோக்கியத்தனங்கள் செய்து தப்பித்துக் கொள்வதற்குத்தான் வழியாகிறது.

262. ஏதாவது ஒரு சம்பிரதாயத்தை மறை வழிப்படி தானே நடைமுறைப் படுத்துக் காட்டுகிறவன் தான் ஆசாரியன்.

263. குரு என்றால் அவர் உள்ளுக்குள்ளே மிகவும் பெருமை படைத்தவராய். இருக்க வேண்டும். ஆசாரியர் என்பவர் வெளியிலே படிப்பில் பெரியவர்; வெளியிலே போதனை செய்வதில் வல்லவர்; வெளியிலே நடத்தையால் வழிகாட்டுவதில் சிறந்தவர்.

264. மூன்று இலக்கணங்கள் உள்ளவன் தான் ''ஆசாரியன்'' என்று வைத்தார்கள். ஒன்று, சாத்திர சித்தாந்தத்தை நன்றாக தெரிந்து கொண்டிருக்க வேண்டும். இரண்டு, தெரிந்ததை வாழ்க்கையில் நடத்திக் காட்டும் ஆசார சீலராக இருக்க வேண்டும். மூன்று, இப்படி தனக்குத் தெரிந்து கடைப்பிடிக்கும் சாத்திரத்தைப் பிறருக்கு கற்றுக் கொடுத்து அவர்களையும் நெறியாக வாழ்க்கையில் நிலை நாட்ட வேண்டும்.

265. மாணாக்கன் சுத்தனாகவும் புரிந்து கொள்ளும் சக்தியுள்ள வனாகவும் இருக்க வேண்டும். சொல்லிக் கொடுப்பதை நன்றாக புரிந்து ஏற்றுக் கொள்வதே க்ரஹணசக்தி. அப்புறம் அதை மறக்காமல் புத்தியில் இருத்திக் கொள்வது தாரணசக்தி

266. அறமும் அறிவு நூலால் வருவதே; அறிவு நூலின் பயனும் அறத்துக்கு உதவ வேண்டுவதே. ஆகையால் இவற்றைப் பிரித்துக்கூட சொல்லக்கூடாது.

267. கல்வி என்பது அறிவு சம்பாதித்தல் என்பவற்றோடு நிற்காமல் ஒரு ஆத்மா முழுமை பெறுவதற்கு வழிபோட்டுக் கொடுப்பதாகும்.

268. மாணவர்களுக்கு புத்தி மட்டும் வளர வேண்டுமென்றில்லாமல் குணநலனும் வளரவேண்டும் என்றால் அது சுத்தமான தனிப்பட்ட குருமார்களால் நடக்கிற அளவுக்கு, கல்வி நிறுவனத்தால் ஒரு நாளும் முடியாது. நிறுவனத்தில் அறிவினைத் தான் பரிட்சித்து வளர்க்க முடியும். குணத்தை முடியாது.

269. குரு தனியாக நின்றே சோபிக்க வேண்டுமென்னும்போது தான் தன்னை அப்பழுக்கற்றவராக்கி கொள்ள வேண்டுமென்பது அத்தியாவசியமாய் விடுகிறது.

270. *குணமில்லாத புத்திசாலித்தனத்தை விட பெரிய ஆபத்து ஏதுவுமில்லை.*

271. குருவானவர் மற்ற எல்லா தகுதிகளுக்கும் மேலான அன்பு உள்ளவராக அருள்சுபாவம் உள்ளவராக இருந்தாக வேண்டும்.

272. வித்யையை வித்யை (அறிவு) என்று குருமார்கள் கற்றுக் கொடுப்பதும் சீடர்கள் கற்றுக் கொள்வதும் தான் உயர்ந்தது. ''பணத்துக்காவும் வித்யை'' என்பது இடைப்பட்டது. ''பணத்திற்காகவே வித்யை'' என்றால் அது தாழ்ந்தது.

273. மனிதப்பிறவி கிடைத்தும் அதன் அறிவாலே பெறக்கூடியவற்றைப் பெற்று அதன் மூலம் மனிதத்துவத்துக்கு மேலே போக முயற்சி பண்ணாமல் நாம் செத்துப் போனால் அது ஆடு, மாடு பிறவிக்குச் சமானம் தான்.

274. ஒரு ஆடு, ஆடாகவோ, மாடு மாடாகவோ இருந்து மடிவதில் அவற்றுக்குக் குறைவு இல்லை. ஆனால் மனிதப் பிறவி எடுத்தவர்கள் இதற்கு அவன் பெற்றுள்ள உபரி அறிவின் தர்மப்படி அதை ஒரு வித்யையால் சோபித்துக் கொள்ளச் செய்யாமல் விட்டு விட்டால் அது ரொம்பவும் பெரிய இழப்பாகும்.

275. சீடர்களின் தரத்தைப் பொறுத்துத்தான் குரு உருவாகிறார். சிறந்த அறிவாளிகளாக சீடர் கூட்டம் இருந்து விட்டால் அதற்குத் தகுந்தாற் போல் குருவும் தன் நிலையை உயர்த்திக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

276. தானும் கரை சேர்ந்து பிறரையும் சேர்ப்பிக்கிற பிரம்ம ஞானி தான் குரு.

277. வித்யைக் கெல்லாம் மேலே இருப்பது அத்வைத வித்யை. அந்த வித்யை வெறும் புத்தகமோ மந்திரமோ இல்லை. அதுவே அநுபவம். தன்னில் தானாக இருக்கிற ஒரே சத்திய அநுபவம்.

278. ஆசார்ய சரணாகதி பண்ணி விட்டோமானால் போதும் அப்புறம் எங்கே போய் முடிய வேண்டுமோ, நிறைய வேண்டுமோ அங்கே கொண்டு போய்ச் சேர்ப்பது அவர் பொறுப்பு.

279. நமக்கு நம் பரமாத்வத்தை எடுத்துச் சொல்லி அதை நாம் அநுபவமாக்கிக் கொள்வதற்காகச் சாதனைகளைச் செய்ய வைத்து தம் கர்மா பாக்கி தீர்வதற்காகத் தாமே தவத்தைச் செய்து உபகாரம் பண்ணும் அந்த ஒருத்தர்தான் குரு என்பவர்.

280. மருந்தை விட பத்தியம் முக்கியம். கல்வி என்கிற மருந்தை விட அடக்கம் என்கிற பத்தியம் முக்கியமானது.

281. முதல் வாழ்க்கை நிலையாகிய ப்ரம்மச்சரியத்திற்கு வேத வேதாங்கம் அறிந்தவர் குரு. வித்யையைத் தெரிந்து கொள்வது முதல் ஆசிரமம். ஞானத்தை தெரிந்து கொள்வது கடைசி ஆசிரமம்.

282. ''காமன்'' உள்ளே புகுவதற்கு முன் ''காயத்ரீ'' உள்ளே புகுந்து விடவேண்டும் என்பது முக்கியம்.

283. எவரும் எவருக்கும் சொல்வது ''சந்தேகம்''. கேட்பவனுக்கு நல்லதோ இல்லையோ அவன் கேட்டுத் தானாக வேண்டும் என்று அரசன் மாதிரி உயர்ந்த நிலை இருப்பவன் குடிமகன் மாதிரி கீழ்நிலை இருப்பவனுக்குச் சொல்வது ''ஆதேசம்'' கேட்பவனின் நல்லதற்காகவே குரு என்பவர் சீடனுக்குச் சொல்வது ''உபதேசம்''

284. தாயார், தகப்பனார்கள் இந்த உலகத்தில் பிறப்பைக் கொடுத்து இந்த உலகத்தில் நன்றாக வாழப் பண்ணி இந்த உலகத்திற்கான சொத்தைக் கொடுப்பார்கள் ஆனால் இவையெல்லாம் நிலையல்லாதவை. நிலையான சொத்தை – என்றும் அழிவில்லாத பிரம்மானுபவத்தைத் தருபவர் ''குரு''தான்.

285. அம்மா போடும் சாப்பாடு அந்த வேளைக்கு தான் பலன் தரும். அடுத்த வேளை மறுபடி பசி வந்து விடுகிறது. பலம் குறைகிறது. குரு செய்யும் உபதேசமோ, அமிருதமாக, (நிலையான) ஆத்ம பலத்தை கொடுத்து விடுகிறது.

286. ''நல்லாசானை'' உடைத்தாயுள்ள மனிதனே ஞானம் அடைகிறான். என சாந்தோக்ய உபநிஷத் கூறுகிறது.

*''ஆசார்யவான் புருஷோ வேத''*

287. ''கண்காணாக் காட்டிலே கண்ணைக் கட்டிக் கொண்டு விடப் பட்டவனுக்கு எப்படி ஏற்கனவே வழி கண்டவர்கள் மட்டுமே வழி சொல்லித்தந்து காப்பாற்ற முடியுமோ, அப்படியே அஞ்ஞானப் பிறவிக்கு ஞானியான குருநாதன்தான் நாத சித்திக்கு வழி சொல்லித்தர முடியும்'' என்று சாந்தோக்ய உபநிடதம் கூறுகிறது.

288. கண்டவரே தமக்கு வழி காட்டியாக இருந்து காணச் செய்ய முடியும். அவர்தான் ஆன்மீக வழிகாட்டி (Spiritual guide) யான தேசிகர்.

289. தனக்குப் பிடித்த ஒருவரைத் தானே தேர்ந்தெடுத்து வரிப்பதுதான் ''வரணம்'' என்பது. சரியான குருவைத் தேர்ந்தெடுத்து அவரிடம் போய்ச் சேருவது ''குருவரணம்''. நல்ல சீடனைத்தேடி எடுப்பது ''சிஷ்ய வரணம்''

290. குரு என்ற மின் கம்பி வழியாக உபதேசம் என்ற பல்பில் (Bulb) வத்தால் தான் மின்சக்தி கட்டுப்பாட்டில் வந்து வெளிச்சம் கிடைக்கும்.

291. வீரமாகட்டும். சிருங்காரமாகட்டும், சிரிப்பாகட்டும் கோபமாகட்டும் – அவைஎல்லாமே மனதின் கொந்தளிப்பு நிலை. அவை சித்தத்தை கலக்குகிறவை. நிலைத்து நீடித்து நிலையான ஆனந்தத்தை அவை உண்டாக்குவதில்லை. ***மாறாத ஆனந்தம், சாந்தம் தான்.***

292. நாம் எத்தனை விதமான உணர்ச்சிகளால் மொத்துப் பட்டாலும் கடைசியில் நிலையான இன்பம் வேண்டுமானால் சாந்த நிலையைத் தான் அடைய வேண்டும். அதற்குத்தான் எல்லா கலைகளும் உதவ வேண்டும்.

293. இந்த நாளில் excite (கிளர்ச்சி யூட்டுவது) பண்ணுவதுதான் entertainment (களியாட்டம்), என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த நாளிலோ elevate (உன்னதமாக்குவது) பண்ணுவதுதான் entertainment என்று தெரிந்து கொண்டு எத்தனைதான் உணர்ச்சிகளை கிளறிவிட்டாலும் முடியாத ஆத்மார்த்தமானதாக்கி சாந்தத்தில் அடங்கச் செய்தார்கள்.

294. ''கலா'' என்றால் ''எப்போதும் வளருவது'' என்று பொருள் – சந்திர கலை என்கிறோமே, அது போல பிறை தினந்தோறும் வளர்வது போல மனவளர்ச்சியைத் தருவது கலை. முடிவே இல்லாமல் வளர்வது இது.

295. அம்பாள் தான் பிரம்மத்தின் சக்தி. நாதம் 'இறைவன்' அல்லது ''பிரம்மம்''. அம்பாள் சங்கீதத்தில் சொக்கி ஆனந்தமாய் இருக்கிறாள் என்றால் அது பிரம்மமும் சக்தியும் வேறு வேறாக இல்லாமல் ஒன்றிய அத்வைத ஆனந்தத்தையே குறிக்கும்.

296. பொதுவாக வாழ்க்கையில் ஒழுக்கம் ஏற்பட்டுவிட்டால் அப்புறம் அதன் ஒவ்வொரு துறையிலுமே ஒழுக்கத்தினால் உண்டாகிற அழகும் ஏற்பட்டு விடுகிறது. இதனால்தான் பழங்கால சிற்ப சித்திரங்கள், எழுத்து உட்பட எல்லாம் ஒழுங்காக அழகாக இருக்கின்றன.

297. மனதில் உள்ள அசுத்தங்கள் எல்லாம் நீங்கினால் அது தானாகவே பரமாத்மாவின் பக்கம் திரும்பி விடும். ஒழுங்கினாலும் கட்டுப் பாட்டினாலும் தான் மனிதன் அசுத்தங்களை அகற்ற முடியும். இந்த சரீரக் கட்டுப்பாட்டினாலும் தான் மனதின் அசுத்தங்களை அகற்ற முடியும். இந்தச் சரீரக் கட்டிலிருந்து ஆத்மா பிரிந்து போவதற்கு முன்பு சரியான கல்வியின் மூலமும் கட்டுப்பட்டு ஒழுங்காக வாழ்ந்து அசுத்தங்ளைப் போக்கித் கொண்டு விடவேண்டும்.

298. ஆசாரியாருடைய பார்வை என்கிற நல்ல காற்று நம் மேல்பட்டால் குமிழ் உடைந்து நீர்த்துளி கடலோடு ஐக்கியமாகி விடுவது போல, நாமும் பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து விடுவோம்.

299. ''எண் சாண் உடம்பிற்கு சிரசே (தலை) பிரதானம்'' என்கிறோம். அப்படி வேதத்திற்கும் ஒரு சிரசு (தலை) இருக்கிறது. உபநிடதங்கள் தான் அப்படிப்பட்ட தலை.

300. ''தற்பெருமை பாராட்டக் கூடாது'' என்பது அடக்கத்தைத்தான் குறிக்கிறது. நாமும் அப்படி அடக்கமாக ஆரம்பித்து நல்லவர்களாக இருக்க முயற்சி செய்வோம்.



**ஆதி சங்கரர் வாக்கு**

*தாமரை இலை மீது ஒட்டாமல் அசைந்தோடிக் கொண்டிருக்கும் தண்ணீரைப் போல மனித வாழ்க்கை நிலையற்றது. உலகில் எவ்விடத்தும் நோயும் செருக்கும் தான் காணப்படுகின்றன. எவனும் தான் நலமாக இருப்பதாக நிலைப்பதில்லை.*

*உண்மைப் பொருள் அறிந்த நல்லோர்களுடன் சேர்ந்து நீ பழகினால் உலகப்பற்றை அறுப்பாய்; உலகப்பற்று நீங்கினால் உன் மயக்கம் தொலையும். மயக்கம் தொலைந்தால் நீ இந்த உலகில் வாழ்ந்திருக்கும் போதே ஞானியாக, அதாவது ஜீவன் முக்கதனாக ஆகி விடுவாய்.*

*காலம் மாறி மாறி மனிதனது உயிர்வாழ்க்கையும் முடிந்து விடுகிறது. இப்படியிருப்பது தெரிந்தும் ஆசை மட்டும் அகல்வதில்லை. உயிர்க்காற்று நீங்கினாலும் ஆசையாகிய காற்று நீங்குவதில்லை.*



# சமுதாயம்

301. உங்கள் வீடு ஒரு குடும்பம். இதற்கு அப்பாவும், அம்மாவும் தலைவர்கள். இப்படியே இந்த உலகம் முழுதும் ஒரு பெரிய குடும்பம் இதற்கு இறைவனும் இறைவியும் அப்பாவும், அம்மாவுமாக இருக்கிறார்கள்.

302. கல்வி கற்கிற காலத்தில் ஆற்றவேண்டிய கடமை கல்வி கற்பதுதான். அதற்கு இடையூறாக அரசியலில் ஈடுபாடு காட்டுவது தனக்கும் தேச நட்புக்கும் இடையூறுதான் செய்யும். தம் தேசத்தை நல்ல வழியில் நடத்துவதற்கு முதலில் நல்லபுத்திபலமும் தர்மபலமும் தெய்வபலமும் பெற்று நிலைப்படுத்திக் கொண்டால்தான் அதை வளர்த்துக் கொள்ள முடியும்.

303. இளம் தலை முறையினரைக் கருதியாவது வயதான தலைமுறையினர் நன்னெறிகளில் – நல்லொழுக்கங்கள் என்கிறவற்றில் கட்டுப்பட்டு வாழ ஆரம்பிக்க வேண்டும். அதை அடுத்த தலை முறையினருக்கும் பக்குவமாக எடுத்துச் சொல்ல வேண்டும்.

304. நம் பண்பாடே சாந்தத்தில் நிறைந்து போவது தான். ''சாந்தி: சாந்தி: சாந்தி:'' என்று மூன்று முறை சொல்லியே எந்த வைதீக காரியத்தையும் நாம் பூர்த்தி செய்கிறோம். அந்த சாந்தி நிலையில் உணருகிறவன் – உணரப்படுவது என்ற பேதமில்லாமல் எல்லாம் அடங்கிப் போகிறது.

305. தன் உயிரே போவதாக இருந்தாலும் அறிவை எங்கிருந்தாலும் பெறப் பாடுபடுவது, அதே மாதிரி தன் உயிரையே எடுக்கக்கூடியவனாக இருந்தாலும் தனக்குத் தெரிந்த அறிவை அவனுக்கும் கொடுப்பது – இதுதான் இந்தியப் பண்பாடு.

306. நம் கலாச்சாரம் உலகமெங்கும் கொண்டாடப் படுவதற்குக் காரணம் தகுந்த பாத்திரம் கிடைத்த போது அறிவை கொஞ்சங் கூட அடைத்து வைக்காமல் திறந்துவிட்டது தான். அதற்கு நேர் எதிராக தகுதியற்றவர்களிடம் அறிவு போனால் அதைவிட விபரீதம் வேறு இல்லை என்பதால் நமது முன்னோர்கள் இப்படிப்பட்டவர்களுக்கு தங்கள் உயிரே போனாலும் அறிவைக் கொடுக்கமாட்டார்கள்.

307. ''அன்புக்கு மட்டும்தான் அடைக்கும் தாழ் இல்லை'' என்று இல்லை, அறிவுக்கும் அப்படியே என்பதே பாரதீயர்கள் கடைப்பிடித்த உன்னதநெறி.

308. உலகத்தில் இருக்கிற சரியானவற்றையும், தவறானவற்றையும் மட்டுமே ஒருவன் எப்போது பார்த்தாலும் நினைத்துக் கொண்டு அறிவுரை கூறிக் கொண்டே இருப்பது என்றால் (அவன்) தன் ஆன்மாவைக் கவனித்து உயர்த்திக் கொள்ள முடியாமலேபோகும்.

309. நம் வரையறைகளை (limitations) புரிந்து கொண்டு நம்முடைய அறிவுரை (advice) எங்கே எடுபடுமோ அங்கே மட்டும் நல்லது பொல்லாததுகளைச் சொல்வதோடு நிறுத்திக் கொள்வது தான் நம்மாதிரி சாதாரண நிலையினருக்கு உகந்ததாக இருக்கும்.

310. பொருளாதாரம் மட்டும் ஒரு வாழ்க்கைக்கு முழுமை தந்து விடுமா என்ன? ஒரு நாளும் இல்லை. அருளாதாரத்தைப் பிடித்து அதனால் இதை அளவு படுத்தினால்தான் முழுமையான வாழ்வின் நிறைவு ஏற்படும். அந்த அருளாதாரத்தைப் பிடிக்க வழி அடக்கம் தான்.

311. (நமது மதத்தில்) தனி மனிதனுக்குப் பலவிதக் கட்டுப்பாடுகள், சமூகத்திற்கும் பலவிதக் கட்டுப்பாடுகள். கட்டுப்பாடு என்றால் கரை போடுவது என்று அர்த்தம். கரையில்லாமல் ஒரு ஏரி இருக்க முடியுமா? கட்டுப் படுத்தக் கூடாது என்று அப்படியே உடைத்து விட்டால் நீர் முழுதும் பாழாகி ஊரும் பாழாக வேண்டியது தான்.

312. 'பழையது'என்பதற்காகவே அதுதான் உயர்த்தி என்று சொல்லவேயில்லை. ஆனால் ''பழையது'' என்பதாலேயே அதை உதவாதது என்று ஒதுக்கி விடவும் கூடாது. அதன் பயன் என்ன என்று தேர்ந்து பார்த்தே எடுத்துக் கொள்ள வேண்டும்.

313. ***ஆத்மார்த்தமான சத்தியங்கள் எந்நாளும் மாறுவதில்லை.*** மாறுகிற சமூகத்தை அந்த மாறாத சத்தியத்தில் நிலைப்படுத்துவதற்காக சாத்திரங்கள் விதித்த விதிகளும் மாறாதவையே.

314. தர்ம சாத்திர விதிகள் வாழ்க்கை முறையில் அசௌகரியமாக இருக்கிறது என்று குறைப்படுவதே பொருந்தாது. ஏனெனில் தர்ம சாத்திரம் இவ்வுலக சௌக்கியத்தை முக்கியமாகவே கருதவில்லை. இவ்வுலகில் பலவித அசௌகரியங்களை அநுபவித்தாவது பரலோக சுகம் பெறுவதற்கே அது வழிகளைச் சொல்கிறது. எனவே அதை உலகரீதியில் நமது சௌகரியப்படி மாற்ற வேண்டும், என்பது நியாயமில்லை.

315. ''புராணங்கள்'' ''புளுகு மூட்டைகள்'', ''சாத்திரங்கள்

குருட்டு நம்பிக்கையை வளர்ப்பவை'' என்பதைத்தான் ஆரம்பத்திலிருந்தே நம் குழந்தைகள் கேட்டு வருகிறார்கள். இவர்களுக்கு எப்படி நம்மத வழி முறைகளிலும் நெறமுறைகளிலும் பிடிப்பு ஏற்படமுடியும்?

316. அவனவனுக்கும் அதது கடமை என்கிறபோது அதில் உயர்வு தாழ்வு இல்லவே இல்லை. ஆனால் பணம் தான் குறிக்கோள் பதவிதான் குறிக்கோள் என்றால், அதிகப் பணம் சேர்க்கிறவன் உயர்த்தி, மற்றவன் தாழ்த்தி, பெரிய பதவியில் வருகிறவன் உயர்த்தி, மற்றவன் தாழ்த்தி என்ற பேத எண்ணங்கள் வந்து கொண்டுதான் இருக்கும்.

317. சத்தியம் என்றால் வாக்கும் மனதும் ஒன்று படுவது மட்டுமல்ல. நல்ல மனதில் தோன்றுகிற ***நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம்***. நல்ல விளைவுகளை உண்டாக்குவதே சத்தியம்.

318. குறைகள் உள்ளவரிடம் அதை எடுத்துக் காட்ட வேண்டுமானால் நமக்கு பூரண தகுதி இருக்க வேண்டும். நம்மிடமே ஏராளமான குறைகளை வைத்துக் கொண்டு இன்னொருத்தருக்கு உபதேசம் செய்தால் அது பலனளிக்காது.

319. நாம் ஆசைப்படுகிற பொருள் கிடைக்காத போது அதற்குத் தடையாக இருந்தவர்கள் மீது அல்லது தடை என்று நாம் நினைத்தவர்கள் மீது கோபம் வருகிறது. அதாவது நிறைவேறாத காமமே கோபம் என்று பெயர் கொள்கிறது.

320. காமமும் ஒரு நெருப்புத் தான் அது தீயாக எரிகிறது. அதற்குப் பிரியமான பொருளைக் கொடுப்பதால் பசி அடங்காமல் அதிகமாகிக் கொண்டே போகிறது. அது நம் மனதையே கறுப்பாக்கிவிடுகிறது.

321. பெரும்பாலும் நம் கோபத்தை எதிரொளி பொருட்பெடுத்துவதே கிடையாது. ஆத்திரப் படுவதால் நாமே நம் உடல், மனது இரண்டையும் கெடுத்துக் கொள்வதோடு சரி. ***அன்பாக இருப்பது தான் மனிதனின் இயற்கையான தர்மம்***. அதுதான் ஆனந்தமும்.

322. அன்பு தருகிற ஆனந்தத்தில் பழகிப் பழகி உலகம் முழுதும் குருவாக நினைத்து அனைத்து பிராணிகளிடமும் காரணபேத மில்லாத சமமான அன்பு செலுத்த வேண்டும். உலகம் முழுதும் அன்பைப் பரப்பினால் அதுவே ஆனந்த நிலை. அதுவே பரிபூரண நிலை. அதுவே பரமசாந்தி.

323. குற்றம் இழைத்தபின் ஒருவரைத் தண்டிப்பதும், ஒருவர் சுபாவமான தர்ம உணர்ச்சி இல்லாமல், தண்டனைக்கு பயந்தே குற்றம்

செய்யாமல் இருக்கச் செய்வதும், இரண்டாம் பட்சம்தான். *குற்றம் செய்கிற எண்ணமே தோன்றாமல் செய்வதுதான் உணர்ந்தது*.

324. தர்மங்களை எடுத்துச் சொல்வதை விட எடுத்துக் காட்டாக தாங்களே இருப்பதுதான் அதிக சக்தி வாய்ந்தது.

325. கோர்ட்டுகள் அதிகமாகின்றன என்றால் குற்றங்கள் அதிகமாகின்றன, என்றே அர்த்தம். இதற்குப் பதில் கோயில்கள் அதிகமானால் எங்கும் சாந்தம் பரவும்.

326. வாழ்க்கைத் தரம் உயர்வது என்று சொல்லிக் கொண்டு வாழ்க்கைத் தேவைகளை அதிகப்படுத்திக் கொண்டு போவதால் வீண் ஆசை தான் அதிகமாகும். எத்தனை சம்பாதித்தாலும் போதாமல் நாட்டில் தரித்திரம் தான் மிஞ்சும்.

327. தேவை என்று ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு விட்டோமானால் அப்புறம் அதைப் பூர்த்தி கொள்ளும் ஓயாத முயற்சி ஏற்படத்தான் செய்கிறது. இது திருப்திக்கும் சாந்திக்கும் கேடுதான். போதும் என்ற மனமே பொன்னான திருப்தியைத் தருவது.

328. தற்போது பொருளாதாரத் தேவைகளை அதிகமாக்கிக் கொண்டே போவதைத் தான் ''வாழ்க்கை தரம்'' என்கிறார்கள். இதைவிட்டு மனதினால் உயர்ந்து, உண்மையாகவே வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்வதைத் தான் பெரிதாக எண்ண வேண்டும்.

329. *மனநிறைவு வெளிப்பொருட்களால் ஒரு நாளும் கிடைக்காது*. இவைகளைச் சேர்க்க சேர்க்க மேலும் மேலும் சௌகரியத்திற்கு ஆசைப்பட்டுக் கொண்டு புதுப்புதுப் பொருட்களைக் கண்டு பிடித்து வாங்கிக் கொண்டே தான் இருப்போம். நாம் இப்படி இருப்பதைப் பார்த்து வசதியில்லாதவர்களுக்கும் இதே ஆசை வெறியை உண்டாக்கி விடுகிறோம். இதனால் போட்டி, சண்டை எல்லாம் உண்டாகின்றன.

330. நமக்கு அது வேண்டும், இது வேண்டும், என்று சதா அரிப்பு இருக்கிறவரையில் நாம் தரித்திரர்கள் தான்.

331. ஆசையாய் இருக்கிறது என்பதற்காக அவசியமில்லாத அல்லது கெட்டதான காரியங்களைச் செய்யவே கூடாது. சொந்த உயர்வுக்கோ உலக நன்மைக்கோ உதவாத காரியங்களில் ஈடுபடவே கூடாது.

332. வாக்குக் கட்டுப்பாட்டை வழக்கத்தில் கொண்டுவர வேண்டும். கணக்காக பேச வேண்டும். பிறருடைய மனதைப் புண்படுத்தாத பேச்சே பேச வேண்டும். தன் ஆத்மாவை உயர்த்திக் கொள்ள உதவுகிற விஷயங்களையே பேச வேண்டும்.

333. எல்லாவற்றுக்கும் மூலம், அகம்பாவத்தை விட்டுத் தொலைப்பது தான். அது தொலைந்தால் அடக்கத்தோடு, ஆனந்தத்தோடு எந்த காரியத்தையும் இறைவனுக்கு அர்ப்பணிக்கும் புத்தியோடு செய்து நாமும் நலம்பெறலாம். உலகத்தையும் நலமாக வைத்திருக்கலாம்.

334. பெண்கள் தான் தர்மத்தை வளர்க்கிற தீபங்களாக இருக்கிறவர்கள். அவர்களின் பண்பு கெடுவதற்கு இடமே தரக்கூடாது. அப்புறம் தேசம், பிழைக்காது. குலப்பெண்களின் சித்தம் கெட்டுப் போய்விட்டதானால் அப்புறம் தருமமே போய்விடும்.

335. மறுபடியும் நாம் இந்த தேசத்தில் பயமில்லாத மக்களாகத் தலையை நிமிர்த்தி நடக்க வேண்டுமானால் 'ஷத்ர' தர்மத்தை வளர்க்க வேண்டும். தனி மனிதர்கள் உறுதியும் ஆத்மபலமும் கொண்டிருப்பது, அவர்கள் கட்டுப்பாடுடன் ஒன்று கூடி ஒற்றுமையாக உழைப்பது, தீமையையும் அடக்குமுறையையும் கண்டு அஞ்சாத நெஞ்சுறுதியுடன் போராடுவது– இவையெல்லாம் இந்த தர்மத்தில் அடக்கம்.

336. உலக நன்மை ஒன்றே இலட்சியமாகக் கொண்டு இந்த தர்மத்தை நடத்திக் காட்டினால் நாட்டின் ஒழுக்கம் மிக உயர்ந்த நிலையை அடையும். அரசாங்கத்தின் தரமும் தானாகவே உயரும்.

337. ஆசைக்கும் வெறுப்பிற்கும் காரணம் அகங்காரம். அகங்காரம் தொலைந்தால் எந்தக் காரியங்களிடையிலும் உயர்வு, தாழ்வு தெரியாது. நாம் பாட்டுக்கு நம் கடமை இது என்ற உணர்ச்சியோடு ஆனந்தமாகச் செய்து கொண்டிருப்போம்.

338. மருத்துவமனைகள் வைத்து உடல் வியாதியைத் தீர்ப்பது போதாது. நோயாளிகளது மனத்தில் கெட்ட எண்ணங்கள் என்ற வியாதி இல்லாமல் செய்வதே அதை விட முக்கியம்.

339. துன்பம் இருக்கும் இடங்களில் பணத்தாலோ சரீரத்தாலோ வாக்காலோ தம்மால் முடிந்த உதவி பண்ணவேண்டியது, நமது கடன், கடமை, இப்படிசெய்வதால் நமக்கு மனத்தூய்மை நிச்சயமாக ஏற்படுகிறது. அதாவது மனமாசு அகல்கின்றது.

340. பிறத்தியாரைக் கஷ்டப்படுத்தியாவது நம் புலன் இன்பங்களைப் பூர்த்தி பண்ணிக் கொள்வது தான் தப்பான சுயநலம். மனதை சுத்தப் படுத்திக் கொள்ள வேண்டுமானால் நாம் கஷ்டப்பட்டாவது நல்லதே பண்ண வேண்டும்.

341. தீபத்தின் ஒளி எப்படி வேறுபாடு பார்க்காமல் உயர்ந்தவன், தாழ்ந்தவன், புழு, பறவை, மரம், மற்ற நீர் வாழ்பிராணிகள், நிலம் வாழ் விலங்கினங்கள் இவற்றின் மீது படுகிறதோ, அப்படியே நம்

மனதிலிருந்து அன்பு ஒரு தீபமாக எல்லோரையும் தழுவுவதாக பிரகாசிக்க வேண்டும்.

342. நாம் ''தானம் கொடுக்கிறோம்'' என்ற வார்த்தையைச் சொல்வது கூடத் தப்புதான் – ''பகவான் நம்மைக் கொடுக்கும்படி வைத்தான். கொடுத்தோம்'' என்று அடங்கி அடக்கமாக கொடுக்க வேண்டும். எங்கே இதிலும் ஒரு அகங்காரம் வந்துவிடுமோ என்று பயந்துகொண்டு கொடுக்க வேண்டும்.

343. பணக்காரன் பணம் தருவதும் ஏழை உழைப்பு தருவதும் பெரிய தியாகமில்லை. பணக்காரன் ஏழைகளோடு வந்து நின்று கொண்டு மண்வெட்டி எடுத்து வெட்ட வேண்டும். ஏழை தன் கூழுக்கு ஒரு மிளகாய் வாங்கிக் கொள்வதற்குப் பதிலாக காலணா நன்கொடை கொடுக்க வேண்டும். அதுதான் பெரிது.

344. தெய்வ பலத்தை நம்பி மனோபலத்தோடு காரியம் செய்தால், அதுவும் தனக்காக இல்லாமல் உலகத்துக்காகச் செய்தால், கிழத்தனத்தின் பலமின்மையும், ஓய்ச்சலும் இல்லாமல் இளைஞர்களை விட உற்சாகமாகப் பண்ணலாம். ***கிழவன் நானே சொல்கிறேன்.***

345. தனக்கென்று அவ்வளவு செலவழிக்க முடியுமோ அப்படி எளிமையாக வாழ்ந்து மிச்சம் பிடித்து அதை தர்மத்துக்கச் செலவழிப்பது தான் ''தனக்கு மிஞ்சித் தர்மம்'' என்பது.

346. வயிறு நிரம்பச் சாப்பாடு, மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளத் துணி, இருப்பதற்கு ஒரு குச்சு வீடு – இம்மாதிரியான அடிப்படைத் தேவைகள் எல்லோருக்கும் பூர்த்தியாக வேண்டும். இதற்கு மேல், ஆசைக்கு மேல் ஆசை, தேவைக்கு மேல் தேவை என்று பறக்க வேண்டியதில்லை. அப்படி மற்றவர்களை பறக்காமல் இருக்கச் செய்வதற்காக நாமும் எளிமையாக வாழ வேண்டும்.

347. தான் பிறர் பாரத்தை தாங்குகிறவனாகத் தான் இருக்க வேண்டுமே யொழிய தன் பாரத்தை இன்னொருவரிடம் தள்ளினால் அது தனக்கு அவமானம்.

348. உலக சேவைக்கு போகிறவர்கள். 'என் காரியம் பூராவையும் நானே பார்த்துக் கொண்டு தான் பொதுத்தொண்டுக்குப் போவேன்'' என்று உறுதி பண்ணிக் கொண்டுவிட்டால் எல்லாம் சரியாகி விடும்.

349. ''சுதந்திரம்'' ''சுதந்திரம்'' என்று சொல்லி எல்லோரையும் இயற்கையாக அடக்க குணம் உள்ள நல்ல பொதுமக்களை மமதையில் கொண்டு தள்ளியிருப்பது தான் சீர்திருத்த வாதிகள் செய்திருக்கிற கைங்கர்யம்.

350. முடிவிலே முழுக்க ஆத்மலோகம் என்பதை லட்சியமாகக் கொண்டே சரீரம், வீடு, சுற்றுப்புறம் முதலான புற விஷயங்களின் சுத்தத்திலிருந்து ஆரம்பித்து நெறிமுறைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

351. சுத்தர்கள் எப்படி வாழ்கிறார்களோ, தங்கள் வாழ்க்கை, யுதாரணத்தாலேயே எதை உபதேசிக்கிறார்களோ, அதற்குத் தான் மதிப்புண்டு.

352. ஒரு மனிதன், மிருகம், பறவை இவற்றை உண்பது உடன் பிறப்பை கொலை செய்வது தான். அசைவ உணவை ஆதரித்தால் ''அனைத்துயிர் சகோதரத்வம்'' என்பதற்கு அர்த்தமில்லாமல் போகிறது.

353. நிரந்தர ஒற்றுமைக்கு வழி, சேர்ந்து ***உண்டு காட்டுவதல்ல***. சேர்ந்து ***தொண்டு காட்டுவதேயாம்***. நான் பல சமயங்களில் சொன்னதுபோல ஜாதி என்ற பேச்சுக்கே இடமில்லாமல் எல்லா மக்களும் சேர்ந்து எல்லா மக்களுக்குமான தொண்டுகளைச் செய்வதால் தான் ஒற்றுமை வளரும்.

354. மௌனத்தைக் கடைப்பிடித்தால் அன்றைக்காவது சண்டை சச்சரவு இருக்காது. இக்கெடுதலைத் தவிர்ப்பது மட்டுமல்ல; நல்லது களையும் உண்டாக்கிக் கொடுக்கிற சக்தி மௌனத்திற்கு உண்டு.

***''மௌனம் கலக நாஸ்தி''***
***''மௌனம் சர்வார்த்த சாதகம்''***

355. குற்றம் செய்கிற எண்ணமே மனிதனை விட்டுத்தானாகப் போகும்படி செய்ய சமய நெறிகளான பக்தி, ஞானமார்க்கம் கர்ம மார்க்கம். யோகம் முதலியவை இருக்கின்றன. அவற்றின் கட்டுப் பாடுகளில் மக்கள் வராத போது பயத்தின் மூலம் தான் குற்றம் ஏற்படாமல் தடுக்க வேண்டும் என்றாகிறது.

356. எது தேசத்தின் தர்மத்தை நினைக்கப்பண்ணி நல்ல மக்களுக்கு கொடியவர்களிடம் பயமில்லாமல் பாதுகாப்பைக் கொடுக்கிறதோ அதோடு எது தான் குற்றம் பண்ணினவனையும் இனி மேல் அப்படிப் பண்ணாமல் கட்டுப்படுத்துகிறதோ அது தான் உண்மையான மனிதாபிமானமாகும்.

357. ''ரொம்பவும் அழகாக இருக்கிறோம். பிரமாதமாக அலங்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறோம்'' என்று அகங்காரப் படுகிறவர்களுக்கு பெரிய தண்டனை அவர்களை யாரும் ஏறெடுத்துப் பார்க்காமல் அலட்சியப் படுத்தும்படி செய்வதுதான்.

358. பெரிதாக வாய்ப்பந்தல் போட்டு விட்டு வாழ்க்கையில் வேறுவிதமாக இருந்தானானால் அவன் எத்தனை அழகாக சத்தியத்தை

எடுத்துச் சொன்னாலும் அதற்கு மற்றவர்களை தூண்டி விடும் சக்தி இருக்காததால் அது சத்தியத்தோடு சேரவே சேராது. *உயிரில்லாத வெற்றுப் பேச்சான சத்தியம் சத்தியமேயில்லை.*

359. தான் என்ற பெருமை அகங்கார பாரம். துக்கத்தைப்' போக்கிக் கொண்டு அதன் பாரம் தீர வேண்டும் என்ற எண்ணமாவது மனிதனுக்கு இருக்கிறது. (ஆனால்) அகங்காரமோ, பாரம் என்றே தெரியாததால் இதுதான் பெரிய ஆபத்து.

360. தானே செயல் புரிந்தவனாக கொண்டாடிக் கொள்வது மாதிரி பாரம் (வேறு) எதுவும் கிடையாது. இப்பெருமையினால் நாமே நம் கழுத்தில் கல்லைக் கட்டிக் கொள்கிறோம் என்பது தான் உண்மை.

361. உயர்வான காரியம் எது? கர்மத்தை அழித்துக் கொள்வதற்காக சுய நலம் கருதாமல் பிறர் நலம் மட்டுமே கருதிச் செய்கிற காரியம்தான்.

362. பெரியவர்கள், மற்றவர்கள் செய்த பெரிய தவறுகளையும் மறந்து விட்டு, தாங்கள் செய்த சிறு தவறுகளைத் தான் பெரிதாத நினைப்பார்கள்.

363. வாய்ப்பந்தல் போடுவதாலோ, அரசியல், பொருளாதாரம் சமூகசீர்திருத்தம் என்பவற்றாலோ தேசீய ஒருமைப்பாடு ஏற்படவே ஏற்படாது. எல்லோரும் ஈசனின் குழந்தைகள் என்ற பக்தியினால் தான் (மக்களை) ஒன்று சேர்க்க முடியும்.

364. படித்தவர்கள். நாகரிகக்காரர்கள் என்கிற நம்மை விட பாமரரான ஏழை மக்களிடம் உபகாரம் செய்கிற இயல்பு நன்றியுணர்வு எல்லாம் எக்காலத்திலும் அதிகம் தான்.

365. கட்டுப்பாடு இருந்தால் தான் ஒழுக்கத்தோடு முன்னேற முடியும். கட்டுப்பட்டு நடப்பதற்கு அடக்கம் முதலில் வேண்டும். *அகங்காரம் போனால்தான் அடக்கம் வரும்.*

366. நாம் செய்யும் பாபத்திற்கு உடம்பு தண்டனை. பாபத்திற்கு மூலம் கெட்டகாரியம். கெட்டகாரியத்திற்கு மூலம் ஆசை. ஆகையால் நம் கஷ்டம் அனைத்திற்கும் மூல காரணமாகிய ஆசையைப் போக்கினால் தான் நிரந்தரமான துக்க நிவர்த்தி உண்டாகும்.

367. வரதட்சினை கேட்டால் கல்யாணத்திற்கு கண்டிப்பாக மறுத்து விட வேண்டியது பிள்ளையின் கடமை. இது குடும்பத்திற்கு, மதத்திற்கு, சமூகத்திற்கு, பெண் குலத்திற்கு, எல்லாவற்றிற்கும் செய்கிற தொண்டு. இப்படியாக இளைஞர்கள் எல்லோரும் சபதம் செய்து அதை நிறை வேற்ற வேண்டும்.

368. (கல்யாணத்திற்கு) தங்கத்தினால் திருமாங்கல்யம் மட்டும் பண்ணினால் போதும். மற்ற நகைகள், வைரத்தோடு முதலியன வேண்டாம். பட்டும் வேண்டாம். நூல் கூறைப் புடவை வாங்கினால் போதும். எல்லாவற்றையும் விட வரதட்சிணை தொலைய வேண்டும். ஊர்கூட்டி சாப்பாடு, பாட்டு, நாட்டியம், பந்தல் என்று விரயம் பண்ணுவது போக வேண்டும். நிஜமான சீர்திருத்தம் வரதட்சிணை ஒழிப்புத்தான்.

369. பணம் கொழித்தவர்களும் கூட தடபுடல் பண்ணாமல் சிக்கனமாகவே திருமணம் செய்ய வேண்டும். ஏனெனில் அவர்கள் பண்ணுகிற டாம்பீகம். மற்றவர்களுக்கு ஒரு கெட்ட முன்மாதிரி ஆகி விடுகிறது. ஆகையால் கச்சேரி, விருந்து என்று தாங்கள் செலவிடக்கூடிய இந்த பணத்தைக் கொண்டு வசதியில்லாத ஏழைப் பெண்களுக்குக் கல்யாணம் பண்ணிவைக்க வேண்டும்.

370. நம் மனத்திற்கு ஆதாரமான ஆசாரங்கள், ஆசாரசுத்தி முதலியவை புழக்கத்தில் இருந்தால் தான் (நம்மதம்) செழித்து வளரும். இவை சொற்பொழிவுகளிலும் அப்புறம் நூல் நிலையங்களில் புத்தகமாகவும் மட்டும் இருந்தால் வெறும் வரட்டுப் பெருமை தவிர பலனேதுமில்லை.

371. "பணம்தான் பிரதானம்" என்ற ஒரே ஒரு அம்சத்தை மட்டும் நாம் மாற்றிக் கொண்டு விட்டால் போதும். பணமே குறி என்று நாம் இறங்கின பிற்பாடு தான் ஆசார நெறிமுறைகள், கல்வியறிவு எல்லாம் போய்விட்டன. நம் தேசத்தில் பணம் முக்கியமாய் இருந்ததே இல்லை. உலக வாழ்க்கையை ஆத்ம அபிவிருத்திக்கு துணையாக மட்டும் வைத்துக் கொள்வதுதான் நமது தேச நெறிமுறை.

372. திருப்தி உள்ளவனாக இருந்தால்தான் ஆனந்தமாக இறை தியானம் செய்யமுடியும். அப்படிப்பட்ட மனதில் தான் பரம சத்தியமான பொருள் எதுவோ அது தெரியும் ஆனதால்தான் நம் சாத்திரப்படியே ரொம்பவும் எளியவாழ்க்கையே விதித்திருக்கிறது. ஒரளவுக்கு மேல் சௌகரியங்கள் அதிகமாகிவிட்டால் அப்புறம் புலன் இன்பங்களுக்கு மேலான விஷயங்களுக்கு போகவே முடியாது.

373. எல்லா வகுப்பினரும் நன்றாக உழைப்பது, எல்லா வகுப்பினரும் மிகவும் எளிமையாக வாழ்வது என்பது ஏற்பட்டு விட்டால் ஜாதிகளிடையே வெறுப்பும், ஜாதிகள் போய் விடவேண்டும். என்ற பேச்சும் வரவே வராது.

374. "ஒழிக" கூச்சல் போட்டுக் கொண்டு கால் வலிக்க ஊர்வலம் வருவதற்குப் பதில் இந்த மனித சக்தியை ஏதாவது ஆக்க ரீதியான திசையில் திருப்பி விட்டால் எத்தனையோ வளர்ச்சி ஏற்படும்.

எல்லாவற்றையும் விட பெரிய வளர்ச்சி அனைத்து மக்களிடையேயும் உண்டாகிற அன்புதான்.

375. சகல வகுப்பினரும் சேர்ந்து கோயில் திருப்பணி அல்லது ஏரியில் தூர் வாருவது மாதிரியான சமுதாயக் காரியங்களை எடுத்துக் கொண்டு ஓயாமல் பொதுத் தொண்டுகளில் ஈடுபட்டு வந்தால் தன்னால் அன்பும் சமூக ஒற்றுமையும் ஏற்பட்டு விடும்.

376. ***ஜாதியில் உயர்வுதாழ்வு நிச்சயமாக இல்லை***. மகான்கள் அப்பர், நம்மாழ்வார், சேக்கிழார், நந்தனார், கண்ணப்பர் மாதிரியானவர்கள் எந்த ஜாதியிலும் தான் தோன்றியிருக்கிறார்கள்.

377. என்ன பண்ணுவது என்று சரியாகத் தெரியாமல், புரியாமல் நாமாகவே ஏதேதோ முயற்சி பண்ணி திண்டாடுவதாக இல்லாமல் இலட்சியத்தை அடைந்த பெரியவர்கள் வழிமுறையாக 'இப்படிஇப்படி பண்ணப்பா'' என்று போட்டுக் கொடுத்திருக்கும் வழிமுறைப்படி பண்ணுவதற்குத்தான் சாதனை என்று பெயர்.

378. நாம் ஒன்றிடம் ஆசையாக இருக்கிறேமென்றால் நமக்கு அதனிடமிருந்து இன்பம் தேடிக் கொள்கிறோம். அன்பாயிருக்கும் போது நம்மால் அதற்கு இன்பம் உண்டாக்குகிறோம். ***ஆசை என்பது வாங்குதல்; அன்பு என்பது கொடுத்தல்.***

379. எதை நாம் ஒன்றிடமிருந்து பெற்றால் தான் நமக்கு இன்பம் உண்டாகுமோ, அவை இருந்தால் தான் அதனிடம் பற்று ஏற்படும். இவற்றுக்காகவே அதனிடம் நமக்கு உண்டாகிற இந்தப் பற்றுதான் ஆசை. தப்பாக அதை 'அன்பு' என நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

380. ***உத்தமமான பொருளிடம் வைக்கும் அன்புக்கே பக்தி என்று பெயர்***. நமக்குச் சமமானவர்களிடம் வைக்கும் அன்பு–நட்பு. உத்தமமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், வயதில் பெரியவர்களிடம் வைக்கும் அன்பு– மரியாதை. சின்னவர்களிடம், நமக்கு கீழ்பட்டவர்களிடம் வைக்கும் அன்பு– அருள். கஷ்டப்படுகிறவர்களிடம் வைக்கும் அன்பு – கருணை.

381. அன்பு அதிகமாக ஆக ஆக, உருவ அழகைப் பார்ப்பது கூட குறைந்து கொண்டே வர ஆரம்பிக்கிறது. அன்பே உருவானவர்களை அவர்களுடைய உருவம் எப்படியிருந்தாலும் திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டே இருக்கிறோம் என்றால் அப்போது ***அன்புதான் அழகு என்று ஆகிவிடுகிறது***.

382. உயிருள்ள உருவமாக இருக்கின்ற ஒன்றின் அழகு, அது அன்பாக இருக்க இருக்க அதிகமாகிறது. ***அன்பு மிகவும் முதிர்ச்சி அடைகின்ற நிலையில் உருவ அழகே எடுபட்டுப் போய் அன்புதான் அழகாகத் தெரிகிறது***.

383. *அன்பு என்பது உருவமில்லாத தத்துவம்*. நாம் பார்க்கும் உலகத்தில் அன்போடு இருப்பது வெளி உருவத்தில் அழகில்லாமலும் இருக்கிறது. அன்பில்லாமல் இருப்பது வெளி உருவத்தில் அழகாகவும் இருக்கிறது. ஆனாலும் அன்பு வந்துவிட்டால் எந்த உருவத்திலும் அது உறுப்பு இலக்கணங்களை மீறி பேரழகு ஒளியைக் கொடுத்து விடுகிறது. அதாவது *உருவமற்ற அன்பு, எப்படியோ உருவத்தில் பிரதிபலித்து விடுகிறது*.

384. *நல்லது, நல்லது என்றால் எது நல்லது? அன்பு தான் மிகவும் நல்லது*. ''அன்பே சிவம்'' என்கிறோம். சிவம் என்றாலும் சுபம் என்றாலும் ஒன்றுதான் 'சுபம்' என்றால் நன்மை. நல்லவைகளில் உயர்ந்த நன்மை எது? அன்புதானே?

385 அன்பின் முதிர்ந்த உருவமே கருணை. எல்லா அன்புகளுக்கும் உச்சியில் பரமாத்மாவிடமிருந்தே பெருகுகிற அன்பே இது.

386. வெறுப்பு அடியோடு போக வேண்டுமானால் வெறுப்பை வெறுத்து கோபத்தோடு கோபித்துக் கொண்டு குத்திக்குத்தி அடக்க வேண்டும்.

387. சித்தாத்தங்கள் நமக்கு எட்டும், எட்டாது. எட்டாது போனாலும் தவறில்லை. *அன்பு எவருக்கும் எட்டாமல் போகாது. அதுதான் நமக்கு வேண்டியது*.

388. எப்போதுமே நாம் அறிவாளிதான் என்ற எண்ணம் நமக்கிருக்கிறது. ஆனால் அறிவை நிஜமாகப் பெறுவதற்கு அப்படியொன்றும் ஆசைப்படுவதோ முயற்சி பண்ணுவதோ இல்லை. பணத்திற்குத் தான் ஆசை, முயற்சி எல்லாம். ''நாம் மிகவும் அழகு'' என்றும் எண்ணம் நமக்கிருக்கிறது. ஆனாலும் இங்கே அறிவுக்கு முயற்சி பண்ணாதது மாதிரி சும்மாயிருந்து விடுவதில்லை! நம்மை எப்படியெல்லாம் அலங்காரம் பண்ணிக் கொள்ளலாமோ அவ்வளவும் பண்ணிக் கொள்கிறோம்!

389. நமக்கு நிரம்ப அறிவு, அழகு இருக்கிறதென்று நினைக்கிறது மாதிரி நிரம்ப செல்வம் இருப்பதாக ஒருநாளும் நினைப்பதில்லை. திருப்திப்பட்டு விடுவதும் இல்லை. கோடி ரூபாய் இருந்தாலும் இனி வேண்டாம் என்று தோன்றுவதில்லை. அதோடு உலகத்திற்கு நம் சொத்தைக் காட்ட நாம் விரும்புவதே இல்லை! எத்தனை இருந்தாலும் இல்லாதது மாதிரியே வேஷம் போட்டு பஞ்சப்பாட்டு பாடிக் கொண்டிருப்போம்!

390. நிலையில், சக்தியில், பெரியவர்களைப் பார்த்தால் வணக்கம் செய்தல் வேண்டும். வணக்க வார்த்தைகள் சொல்ல வேண்டும். அவர்கள் பெயரைச் சொல்லக்கூடாது. சமநிலையில் இருந்தால் ''சௌக்கியமா?'' என்று கேட்கவேண்டும். அப்போதும் பெயரைச் சொல்லிக் கூப்பிடக் கூடாது மற்றவர் சின்னவராக இருந்தால்தான் பெயரைச் சொல்லி'' சௌக்கியமா?'' என்று கேட்கலாம்.

391. பணம் கிடைக்கும் வழி நியாயமானதாக இருக்க வேண்டும். அதைச் சம்பாதிப்பதை விட அது நல்ல வழிகளில் செலவிடுகிற, அதற்காகப் பணத்தைக் கொடுக்கிற மனப்பான்மை தான்முக்கியம்.

392. எந்தத் தொழிலானாலும் சரி, அதை இறைவன் விதித்த கட்டளையாக ''உலக நன்மைக்காகச் செய்கிறேன்'' என்று உணர்ந்து செய்தால் அதுவே ஒருத்தனுக்கு ஆத்ம நன்மையாகவும் ஆகிறது.

393. மனிதப் பிறவி எடுத்ததன் பயனே அன்பு செலுத்துவதுதான் அன்பு செலுத்துவதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை. உள்ள *நிறைவான ஆனந்தம் அன்பு செலுத்துவதிலேயே உண்டாகிறது. அன்பு செலுத்தாத வாழ்க்கை வீணானதே.*

394. நம் அன்புக்குப் பாத்திரமானவர் மரணமடைந்தாலும் கூட ''பரமாத்மா, வேஷமாகப் போட்டுக் கொண்ட ஓர் உடலுக்குத்தான் அழிவு உண்டாயிற்று; இப்போது அந்த உடலுக்கு உரியவர் (மீண்டும்) பரமாத்மாவோடு ஒன்றாகி விட்டார்'' என்ற ஞானத்தோடு பிரிவுத்துன்பத்திற்கு ஆளாகாமல் இருப்போமாக!

395. வெளிக்காரியங்களில் எத்தனை வேற்றுமை இருந்தாலும் இருதயத்தில் அன்பு இருந்தால் தேகத்தில் பரம சாந்தமே இருக்கும். காலம் காலமாக நம் தேசத்தில் அப்படித்தான் சமூகம் சாந்தமாக இருந்திருக்கிறது. அவரவரும் சுயநலனை மட்டும் எண்ணாமல் எல்லா மக்களுக்காகவும் நாம் இந்தக் காரியத்தைச் செய்கிறோம் என்ற மனோபாவத்துடன் செய்தால் ஏற்றத்தாழ்வே இல்லை.

396. பாபிகளை நாம் வெறுப்பதிலும் அவர்களைக் கோபிப்பதிலும் பலனில்லை. அவர்களுடைய மனங்களும் நல்ல வழியில் திரும்ப வேண்டும் என்று பிரார்த்திப்பது ஒன்றே நாம் செய்ய வேண்டியது.

397. நம் தவறுகளைக் கழுவிக் கொள்வதற்காக நாமே ஒவ்வொரு நாளும் அம்பாளிடம் அழவேண்டிய நிலையில் இருக்கிறோம். இந்த நிலையில் உள்ள நாம் பிறரைத் தப்புக்கண்டு பிடித்து கோபிக்க நியாயம் ஏது?

398. நாம் தப்பு செய்யவில்லை என்றால் அன்பு மயமாகி விடுவோம். அப்போது நமக்குப் பாபியிடம் கருணை தவிர வேறு

எந்த பாவனையும் இருக்காது. கோபமே உண்டாகாது. நாம் தப்பு செய்கிறவர்கள் என்றாலோ பிறரைக் கோபிக்க நமக்கு யோக்கியதை இல்லை. எப்படிப் பார்த்தாலும் கோபம் கூடாதுதான்.

399. உயர்ந்த எண்ணங்கள் வளர்ந்து பல கலைகளாக உருவெடுத்து இருக்கின்றன. சித்திர ரூபமாக, நாட்டிய ரூபமாக, சங்கீத ரூபமாக காவிய ரூபமாக, தியாக ரூபமாக, சேவை ரூபமாக, தான ரூபமாக – இப்படிப்பல உருவகங்களாக உயர்ந்த எண்ணங்கள் வெளிப்படுகின்றன. இவை மிகவும் விரிந்து எடுத்துக்கொள்ளும் உருவமே, எல்லாவுயிர்களிடமும் அன்பு. *''உலகம் முழுக்க ஒன்றாகி விட வேண்டும்'' என்று எண்ணுகிற அன்பில் பிறப்பதே மிகப் பெரிய பண்பாடு.*

400. ஒவ்வொருவரும் தானே மகாபுத்திசாலி, தானே மிகவும் யோக்கியன், தானே மிகவும் அழகு என்று நினைத்துக் கொண்டிருப்பது போல், அதிக துக்கமுள்ளவனும் தானே என்று நினைத்துக் கொண்டிருக்கின்றான்.



**ஆதி சங்கரர் வாக்கு**

*நல்லோர்களின் சேர்க்கையே பிறப்பு, இறப்பு என்னும் பவக்கடலைத் தாண்டிக் கரை சேர்க்கும் படகு போன்றது ஆகும்.*

*கங்கைக்கும் கடலுக்கும் சென்று நீராடினாலும் விரதங்கள் பல இருந்தாலும் தானங்கள் பல புரிந்தாலும், மோட்சம் கிட்டாது. மெய்ஞ்ஞானம் ஒன்றினால்தான் மோட்சம் கிட்டும். மெய்ஞ்ஞானம் கிட்டாமல் நூறு பிறவிகள் எடுத்தாலும் மோட்சத்தை அடைய முடியாது.*

*எந்த நிலையிலும் பிரம்மத்தின் மீது மனம் செலுத்தியவனாக இருந்தானானால் அவன் முக்காலத்திலும் ஆனந்தத்தைப் பெறுகிறான்.*

*இறைவன் குற்றம் களைந்து குணத்தைக் கொள்பவன். கடுகளவு குணமிருந்தாலும் அதைக் கடலளவாகக் கொள்ளும் கருணாமூர்த்தி. பணிவார் பிணி தீர்ப்பவன்.*



# வாழ்வியல் நெறி

401. அரசியல் சுதந்திரப் போராட்டத்தைப் போலவே ஆன்மீகச் சுதந்திரப் போராட்டத்திலும் நமது நாட்டின் எல்லா மக்களும் ஜாதி, மத பேதமின்றி ஒற்றுமையாக ஒன்று கூடிச் செயல் புரிதல் வேண்டும்.

402. நம் நாடு சுதந்திரம் அடைந்ததை ஒட்டி நாமும் தனிப்பட்ட முறையில் சுதந்திரம் அடைய முற்பட வேண்டும். *நம்மை நாம் முற்றிலும் அறிந்து கொண்டால் தான் நாம் சுதந்திரம் அடைந்தவர்களாவோம்.*

403. ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாவது மனத்தைச் சாந்தமாக வைத்துக் கொண்டு வேறு நினைவுகளை மனத்தில் செலுத்தாமல் கடவுளது தியானத்தில் அமர வேண்டும். வேறு நினைவுகள் இல்லாமல் தியானம் செய்வதால் நாளடைவில் புத்தியானது தெளிவடையும். ஆசையையும் கோபத்தையும் அடக்குவதற்கு இது ஒரு சாதனமாகும்.

404. பிற பெண்களை தாய்மார்களாக மதிக்க வேண்டும். பிற உயிரைத் தன்னுயிர்போல மதிக்க வேண்டும். உயிர் போவதாக இருந்தாலும் உண்மையே பேச வேண்டும். சமூகச் சச்சரவுகள், வகுப்புச் சச்சரவுகள் செய்வதை அறவே ஒழிக்க வேண்டும். எல்லோரிடமும் சம அன்பு கொண்டு ஒழுக வேண்டும். மக்களெல்லாம் சுகமாக வாழவேண்டுமென ஒவ்வொருவனும் நினைக்க வேண்டும். ஒவ்வொருவனும் தனது அறிவு வளர்ச்சிக்கும் ஆத்ம முன்னேற்றத்திற்கும் பாடுபட வேண்டும். வெற்றிக்கெல்லாம் புத்தியும், சக்தியும் தருமாறு கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும்.

405. *''புண்ய ச்லோகோ நளோ ராஜா, புண்யச்லோகோ யுதிஷ்டிர: புண்யச்லோகோ சவைதேஹீ புண்யச்லோ கோஜனார்தன:''*

இந்த நான்கு பேருக்கும் (நளன், தருமர், *சீதை* கண்ணன்) வாழ்க்கையில் உண்டான தொல்லைகள் கொஞ்ச நஞ்சமல்ல. ஆனாலும் அவர்கள் அத்தனை தொல்லைகளுக்கு நடுவிலும் தர்ம மார்க்கத்திலிருந்து துளிக்கூட விலகாமல் இருந்து வெற்றியாளர்களாக ஆனார்கள். அவர்களை விடிகிறவேளையில் நினைப்பதால் நம்புத்தியும் கொஞ்சம் அந்தமார்க்கத்தில் ஈடுபட ஆசைப்படும்.

406. ''அவனன்றி ஓர் அணுவும் அசையாது'' என்பது

உண்மைதான் என்றாலும் தனித் தனிக் காரியம் என்று எடுத்துக் கொண்டால் உயிரினங்களாகிய நாம் தான் அவற்றிக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பு என்று புரிந்து கொள்ள வேண்டும்.

407. மனதை நாம் வணங்கும் பெரியவர்களிடம் தாழக் கிடத்தல் வேண்டும். வாக்கையும் அப்படியே. கண்ணில் அவர் உருவத்தை நிறுத்தி அதையும் அவருக்குப் பணியச் செய்ய வேண்டும்.

408. உலக தர்மத்தை ஒட்டியே மனிதன் போக வேண்டும். என்பது உண்மைதான். ஆனால் அதோடு முடிந்து போய்விடக் கூடாது. அதோடு ஒட்டிப் போயே அதறகும் மேலே எழும்பி உயர்ந்து போக வேண்டும். தர்மம், அதர்மம் எல்லாவற்றையும் கடந்து பரம சத்திய நிலைக்குப் போக வேண்டும்.

409. நாம் பலவிதமான பொய்களாலேயே துன்பங்களுக்காளாகிறோம் பொய்யினால் பெறும் ஆனந்தமும் விரைவில் பொய்யாகி விடும். உண்மையில் எப்போதும் ஆனந்தமாக இருப்பதற்கு எப்போதும் உண்மையாக இருக்கிறவனைப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். ***உண்மையாக இருக்கிறவர் இறைவன் ஒருத்தர்தான்***.

410. நாம் எல்லோரும் பரம்பொருளைப்பற்றிய உண்மையான ஞானத்தைப் பெற முயல வேண்டும். இந்த ஞானம் என்பது என்ன? பரம்பொருளைத்தவிர வேறெதுவுமே இல்லை என்பது தான் (இந்த ஞானம்)

411. நாம் வாக்கினாலும் மனத்தினாலும் கைகால் முதலியவற்றாலும், பாபம் செய்து இருக்கிறோம். அந்தப் பாபங்களையெல்லாம் வாக்கையும், மனதையும் (அந்தந்த) உறுப்புகளைக் கொண்டே புண்ணியம் செய்து கரைத்து விட வேண்டும். நாம் இந்த உலகை விட்டுப் போவதற்குள் ''பாப மூட்டை இல்லை'' என்று சொல்லும்படி செய்து கொண்டால் அப்புறம் பஞ்சைப் போல ஆனந்தமாகப் பறந்து போகலாம்.

412. பரமாத்மா நம்மைத் தம்மிடம் அழைத்துக் கொள்ள வேண்டுமானால் நாம் உலகத்திற்கும் அவருக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளை வழுவில்லாமல் செய்ய வேண்டும். இந்த கடமைகள் தான் நமக்கான தர்மம் அதாவது ***உடம்பு உள்ள போதும், உடம்பு போன பிற்பாடும் நன்மை பயப்பதே தர்மம்***.

413. இப்போது நாம் செய்ய வேண்டியது என்னவென்றால் ஆசையில்லாமல் காரியம் செய்ய பழக வேண்டும். ஆசையில்லாமல் செய்வது தான் புண்ணிய காரியம்.

414. நாம் இப்போது நான்கு விதங்களில் பாபம் செய்கிறோம். உடம்பால் பல கெட்ட காரியங்கள்: வாயால் புரளிப் பேச்சும் பொய்யும்; மனத்தில் கெட்ட நினைவுகள்; பணத்தினால் செய்கிற பாபத்தைச் சொல்லவே வேண்டாம் (இப்படி) எந்த நான்கால் பாபம் செய்தோமோ அந்த நான்காலுமே புண்ணியம் செய்ய பழக வேண்டும்.

415. சொந்தச் செலவுகளை குறைவாக்கிக் கொண்டு தானதர்மங்களுக்கு முடிந்த மட்டும் செலவழிக்க வேண்டும். செலவுகளுக்குள், நமக்கு என்று இல்லாமல், தானமாகச் செலவழிப்பதுதான் உண்மையில் நமக்கு ''வரவு'' இதனால் புண்ணிய வரவு கிடைக்கிறது. தனக்கென்று செலவழிப்பதில் பெற முடியாத ஆன்ம உயர்வை இதனாலேயே பெறுகிறோம்.

416. கோபமே இல்லை! எங்கேயும், யாருக்கும், யாரிடமும் கோபமே வேண்டாம். அன்பு தான் அனைத்து பிராணிகளிடமும் இருக்க வேண்டும்.

417. மகான்கள் எப்படி இன்னொரு தெய்வத்தை நிந்திக்காமல் தங்கள் இஷ்ட தெய்வத்திடம் பக்தியில் உருகுகிறார்களோ, அப்படியே நாமும் எந்த ஒரு தெய்வத்தையும் நிந்திக்காமல் நம் இஷ்ட மூர்த்தியிடம் விசேஷ பக்தியுடன் இருக்க வேண்டும்.

418. நீத்தார் காரியங்கள் செய்வதில் சிரத்தை வேண்டும். பக்தியோடு செய்வது யக்ஞம்; சிரத்தையோடு செய்வது சிராத்தம்.

419. உலகத்தில் இருந்து கொண்டே உத்தமமான சத்தியத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்கு இந்த உலக வாழ்க்கையையே தர்மமாக நடத்தி உபாயமாக்கிக் கொள்ள வேண்டும்.

420. பழைய அடக்க மனோபாவம் நமக்கு வரவேண்டும் வந்துவிட்டால் காரியத்தில் தான் ஜாதி இருக்குமே ஒழிய மனதில் எள்ளளவும் பேதம் இராது. வாழ்க்கை முறையிலும் பொருளாதார ரீதியிலும் பேதம் இல்லாமல் எல்லோரும் எளிமையாக இருந்து விட்டால் கொஞ்சம் கூடப் பொறாமை, வற்றெரிச்சல் இருப்பதற்கு இடமில்லாமல் போகும்.

421. முதலில் ஆத்ம வித்யையை நன்றாக முறைப்படி தெரிந்து கொள்ள வேண்டும். இரண்டாவதாக உபதேசத்தை நமது புத்தியில் நன்றாக உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். மூன்றாவதாக, கடைசியாக புத்தியில் உறுதியானதை அநுபவமாக ஆக்கிக் கொள்வதற்காக ஆத்மவிசாரம் (தன்னை அறிதல்) ஒன்றே தொழில் என்று உட்கார்ந்து விடவேண்டும்.

422. சிரத்தையோடு இன்றைக்கே ஒரு பிள்ளையார் சுழி போட்டு ஆத்ம வழியில் போக ஆரம்பித்தால் என்றைக்கோ ஒரு நாள் லட்சியத்திற்குப் போய் சேரலாம். ''நிச்சயமாக ஒருநாள்நாமே பரப்பிரும்மமாகிற பெரிய அநுபவம் நமக்கும் வாய்க்கும்'' என்ற சிரத்தையுடன் சாதனையைப் பின்பற்ற வேண்டும்.

423. நாம் செய்ய வேண்டியது செயலின் பலனில் ஆசையை விடுவது; அப்படிப்பட்ட முயற்சி பண்ணுவதுதான்.

424. அடி மனதில் ஜீவனும் பிரும்மமும் ஒன்றுதான் என்பதை நன்றாகப் பிடித்துப் போட்டுக் கொள்ளுங்கள். அது தன்னால் வேலை செய்யும், நீங்கள் ''தெரிந்து'' செய்ய வேண்டியது சாத்திர முறைப்படி காரியங்களைக் கடைப்பிடிப்பதுதான்.

425. அடக்கம் என்பது விநயம். நம்பிக்கை என்பது சிரத்தை. இந்த இரண்டும் நமக்கு இரண்டு கண்கள் மாதிரி.

426. தன்னலம் பாராது பிறர்க்கென உடைமைகளை ஆக்கும் தியாகமே சநாதன வேத தர்மம் வகுத்தளிக்கும் நமது வாழ்க்கைத் தருமம். இந்தத் தியாகமே யாகம் எனப்படுகிறது. பிறர்க்களிப்பதை முக்கியமாகக் கொண்டு அதற்கு எஞ்சியதை இன்றியமையாத சொந்த நுகர்ச்சிக்கு நாமும் ஏற்பதாக வெகு சிக்கன வாழ்க்கையை நடத்த வேண்டும்.

427. தனக்கென வாழாது பிறர்க்குரியாளராக, நமது உடைமைகளைச் சுருக்கி வாழ்வதே நமக்காக இறைவன் விதித்துள்ள தருமம்.

428. நமது மனம் நமக்கு வசமாக வேண்டும். எவ்வளவோ காலமாகத் தன்னிஷ்டப்படியெல்லாமே தீவிரமாக வேலை செய்து கொண்டிருந்த இந்த மனத்தைக் தன்னுள் அடக்கச் சிறிது சிறிதாகவேனும் முயற்சி செய்ய ஆரம்பிக்க வேண்டும். மனம் அடங்கி விட்டால் நமக்கு வேறொன்றும் தேவையில்லை. அதுதான் நாம் பெற வேண்டிய முழுமையான சுதந்திரமாகும்.

429. உடல், உடை இவற்றுக்கு மேலாக ஒன்று இருக்கிறது. அது தான் உள்ளம், மனது என்பது மனச்சுத்தம். உள்ளத்தூய்மை தான் மிக மிக முக்கியம். அது இல்லாமல் உடம்பும், உடுப்பும் எவ்வளவு தூய்மையாக இருந்தாலும் பயனே இல்லை.

430. மனதுக்கு ஏற்படுகிற அழக்கு என்பது என்ன? தப்பு, தவறு செய்வதுதான் உள்ளத்துக்கு அழுக்கு. நாம் செய்கிற காரியங்களில் தவறு ஏற்படக்கூடாது. அதாவது கெட்ட நோக்கங்களுக்காகக் காரியம் செய்யவே கூடாது.

431. காரியம் என்று வந்து விட்டால் நல்லதைச் செய்கிற போது கூட அதில் சில தவறுகள் நேர்ந்து விடலாம். நாமே எல்லாம் செய்து கொள்ள முடியும் என்ற கர்வப்படாமல், இறைவன் துணையால் தான் எல்லாம் சாதிக்க முடியும் என்று நாம் உணருவதற்காகவே இப்படிச் சில தவறுகள் நேர்ந்து விடுகின்றன. இம்மாதிரி சமயங்களில் இறைவனை வேண்டிக் கொள்வது தான் சரி. அதுவே அழுக்கைக் கழுவி விடும்.

432. பெரியவர்களிடமெல்லாம் நிறைந்த மரியாதையும் மதிப்பும் இருக்கத்தான் வேண்டும். ஆனாலும் அர்த்தமில்லாத பயம் கூடாது. பயம் உள்ளத் தூய்மையைக் கெடுக்கிற அழுக்கு. தப்பு செய்தால் கூட, அதை உணர்ந்து பணிவுடன் உள்ளபடி பெரியவர்களிடம் சொல்ல வேண்டுமேயொழிய பொய்யால் மூடி மறைக்கக் கூடாது.

433. ''நாம் தப்பு செய்தோம். அதனால் அதற்குரிய தண்டனையைப் பெறுகிறோம்'' என்று தைரியத்துடன் தண்டனையை ஏற்க வேண்டும். தைரியம், சத்தியம் இவை எல்லாம் மன அழுக்கைப் போக்குகிற சோப்பு, சீயக்காய் மாதிரி.

434. நம்மளவு சௌகரியமோ, அறிவோ அழகோ இல்லாதவர்களைப் பார்த்து நாம் தாழ்வாக நினைத்து கர்வப்படக் கூடாது. கர்வம் என்பது எல்லாவற்றையும் விட கொடிய பெரிய வியாதி போன்றது.

435. பொய், பயம், பொறாமை, நிந்தனை போன்ற அழுக்குகளைப் போக்குகிற சோப்பு, சீயக்காய், அரப்பு வாசனைப் பொடி மாதிரி சத்தியம், தைரியம், விட்டுக் கொடுக்கிற சுபாவம், இன் சொல் ஆகியவை இருக்கின்றன.

436. பரமசிவன் (தனது) புத்திரனுக்கே சீடனாக இருந்த பிரணவ உபதேசம் பெற்றுக் கொண்டார். அறிவைச் சம்பாதித்துக் கொள்வதற்கு எத்தனை தாழ்ந்தும் தழைந்தும் போகலாம் என்று உலகத்திற்கு இதுவே பாடமாகும்.

437. நம்முடைய வைதிக மதத்தில் இறைவனுக்கு அடுத்த முக்கியமான மூர்த்தியாக இருப்பது அக்னி. அதனால் தான் அக்னி சாட்சியாக பண்ணுவதென்று வைத்துக் கொண்டிருக்கிறோம். மணமக்கள் செய்து கொள்ளும் அயுள் முழுதுமான தளைதான் திருமணம். அதை அக்னி சாட்சியாகவே செய்கிறோம்.

438. அகம்பாவத்தை விட்டு விட்டால் மனசு தாழ்மையாகக் கிடைக்கும். அப்படிக் கிடந்தே உயர்ந்ததில் உயர்ந்த சௌக்யத்தைப் பெற்றுவிடும். இந்த மாதிரி மனதைக் கிடத்துவதற்கு அடையாளந்தான்.

பிடியை விட்ட தண்டம் விழுகிறாற் போல பூமியோடு பூமியாக நமஸ்கரித்து கிடப்பது. இந்த தத்துவத்தை புரிந்து கொள்ளாமல் நமஸ்கரித்தால், அந்த நமஸ்காரமே 'தண்டம்' தான்.

439. ''(பிறரை) ஆட்டி வைக்கிற தன்னையும் ஆட்டி வைக்கிறான். அதை நல்லபடியான ஆட்டமாக்க வேண்டியவனும் அவனே; எல்லா ஆட்டத்தையும் நிறுத்தி சாந்தி, சௌக்கியம். தரக்கூடியவனும் அவன்தான்'' என்ற நினைப்பில் தண்டமாக மனதை அவனுக்கு முன் கிடத்துவதுதான் நமஸ்காரம்.

440. மனிதன் ஒருவன்தான் காலுக்கு மேலேயும், உடம்பு தலை என்ற உயர வாட்டில் வளர்கிறவன் ''படைக்கப்பட்ட வர்க்கங்களிலேயே இவன் தான் உயர்ந்தவன் என்பதால் இப்படி இவனைப் படைத்திருப்பது'' என்று பெருமையாகச் சொல்வதுண்டு. ஆனால் இந்த உயர்வு அகம்பாவத்திலேயும் தற்பெருமையிலும் கொண்டு விட்டால் இவன் விலங்கினங்களுக்கும் கீழே போக வேண்டியதுதான்.

441. நம்முடைய சிந்தனை, வாழ்க்கை முறை எல்லாம் மற்ற பிராணிகளைப் போல புலன் இன்பங்களோடு முடிந்து போகாமல் உயர்ந்ததாக இருக்க வேண்டுமென்பதற்காகத் தான் இறைவன் இப்படி படைத்திருப்பதாகப் புரிந்து கொண்டு அதற்கான முயற்சிகளைச் செய்து இன்னும் உயர்ந்த நிலைக்குப் போக வேண்டுமே தவிர, தற்பெருமைப் பட்டுக் கொண்டு கீழே விழுந்துவிடக்கூடாது.

442. போட்டிகள் இருக்கிறவரையில் மன நிறைவு யாருக்கும் உண்டாகாது. பொருளாதார 'வசதி' மட்டும் உண்டாவதால் இந்தப் போட்டி குறையாது. ***போட்டி போக வேண்டுமானால் போட்டி போட இன்னொரு பொருளே இல்லை என்ற ஞானம் வரவேண்டும்.*** அப்பொழுதுதான் சாந்தியோடு நிறைந்து வாழலாம்.

443. பாபங்கள் இரண்டு வகை. ஒன்று சரீரத்தால் செய்த பாப காரியங்கள். இன்னொன்று மனிதால் செய்த பாப சிந்தனை. பாப காரியங்களைப் போக்கிக் கொள்ள புண்ணிய காரியங்கள் செய்ய வேண்டும். பாப எண்ணங்களைப் போக்கிக் கொள்ள புண்ணியமான நினைப்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

444. ஆத்ம சக்தியைப் பலவாறாகச் சிதறச் செய்யும் எல்லா புலன்களையும் அடைத்துக் கொண்டு விட்டால் அப்போது சகல சக்திகளும் ஒரே இடத்தில் அமைதியாக ஆனந்தமாகக் கூடி நிற்கும். மிகுந்த சக்தியுடன் உலகுக்கும் நல்லது செய்யலாம்.

445. துக்கம் என்பதே தன்னைத் தொடாமல் எவனொருவன் இருக்கிறானோ அவனே யோகி. பாபம், அதாவது மனதில் அசுத்தம்

தான், துக்கத்திற்கு காரணம். மனதில் உள்ள அசுத்தங்கள் நீங்கினால் அது தானாகவே பரமாத்மாவின் பக்கம் திரும்பிவிடும். ஒழுங்கினாலும் கட்டுப்பாட்டினாலும் தான் மனதின் அசுத்தங்களை அகற்ற முடியும்.

446. உலகத்தில் ஒவ்வொன்றுக்கும் இப்படித்தான் நடக்க வேண்டும் என்ற வழிமுறை இருக்கிறது. அப்படி அவை வழிமுறைப்படி நடப்பதால் தான் உலக வாழ்க்கை நடக்க முடிகிறது. இல்லாவிட்டால் எல்லாம் தறிகெட்டுப் போய்விடும்.

447. உடம்பு இருக்கும் போதே அதுபோன பிற்பாடு நற்கதி பெற வேண்டியதற்கான தர்ம காரியங்களைச் செய்ய வேண்டும். ஆயுள் போன பிற்பாடு நமது நலனுக்கே நிரந்தர ''இனஷ்யூரன்ஸ்'' ஆக இருப்பது தர்மமே. இது ஆயுள் போன பிற்பாடும் நன்மை பயக்கிற after life insurance. ஆயுள் உள்ள போதும், அதே தர்மம் சாந்தியும் சௌக்கியமும் தருகிறது.

448. தர்ம மார்க்கத்தில் ஒருவன் இருந்தால் பிராணிகள் கூட அவனை ஆதரிக்கும்; அதர்மத்தில் விழுந்தால் உடன் பிறந்தவனும் எதிரியாகி விடுவான் என்பதை இராமாயணம் நிரூபிக்கிறது. ஸ்ரீராமனை வானரங்களும் ஆதரித்தன. ராவணனையோ சகோதரன் விபீஷணனே விட்டு விலகினான்.

449. எத்தனை சுற்று சுற்றினோமோ அத்தனையையும் திரும்பிச் சுற்றினால்தான் கட்டு கழலும். பாப வாசனை அவ்வளவும் தீர அத்தனை புண்ணிய வாசனை உண்டாக வேண்டும். நடுவே அவசரமும், ஆத்திரமும் வேண்டாம் அப்படிச் செய்தால் சிக்கலாகி முடிச்சு விழுந்து விடும். பொறுமையாக பகவானை நம்பி நம் தர்மத்தைச் செய்தால் நிச்சயம் கை கொடுப்பான்.

450. இன்பத்துக்குப் பொருள் சாதனமாக இருப்பது போல் பொருளுக்குத் தர்மம் சாதனமாக இருக்கிறது. எவ்வித தர்மம் செய்தாலும், அதாவது பிறருக்கு என்ன நல்லது செய்தாலும், பலனாகப் பொருள் கிடைக்கும்.

451. நாம் செய்யும் தர்மத்தைப் பலனை எதிர்பார்க்காமல் அர்ப்பணம் பண்ணிவிட்டால் அப்போது நம்மிடத்தில் உள்ள அழுக்குப் போய் பேரின்பமே கிடைக்கும் பொருளைத் தரும் தர்மமே அப்போது பரம் பரம்பொருளைத் தரும் வீட்டுக்குச் சாதனமாகி விடும்.

452. வாழ்க்கையை எளிதாக்கிக் கொண்டால் பொருளுக்காக அலையவேண்டாம்; அறங்களை அப்போது பின்பற்றமுடியும். அறத்தின் பயனாகக் கிடைக்கிற பேரானந்த வீட்டையும் பெறமுடியும்.

453. அறம், பொருள், இன்பம், வீடு என்கிற நான்கு வாழ்க்கைப் பயன்களில் இன்பத்தை மட்டும் தேடி அதற்காக பொருளுக்கு அலைந்து கொண்டிருக்கிறோம். இதை மாற்றி, வீட்டிற்காக, மோட்சத்திற்காக, அறத்தின் (தர்மத்தின்) மூலம் பாடுபடவேண்டும்.

454. பணம் மட்டுமல்ல, இப்படியேதான் வார்த்தைகளை உபயோகிக்கும் போது ஒரு சொல் கூட அதிகமாகக்கூடாது. அளவாக, கணக்காகப் பேச வேண்டும். அதனால் நமக்கும் சரி, நம் பேச்சைக் கேட்கிறவர்களுக்கும் சரி, பொழுது மிச்சமாகும்.

455. தன்னடக்கமும் ஒழுக்கமும் இல்லாமல் ஆத்ம விசாரமும் (தன்னிலை அறிதலும்) ஆத்மாநுபவமும் உண்டாகவே முடியாது.

456. ஏதாவது ஒருநல்ல விஷயத்தில் நாம் பூரணமாக ஈடுபடப்பழகினால் அப்போது சித்தம் கூடிய மட்டும் அழுக்குப் படாமல் இருக்கும். சித்தத்தை நேராக அடக்க முயன்றால் அது திமிறிக் கொண்டு நாலா பக்கமும் பாயத்தான் செய்யும்.

457. வீடு அழுக்கில்லாமல் இருந்தால் போதாது. துணி அழுக்கு இல்லாமலிருந்தால் போதாது. உடம்பு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. ***நம் மனம் அழுக்கு இல்லாமல் இருக்க வேண்டும்.***

458. ஒவ்வொரு உறுப்பினாலும் ஏற்படக்கூடிய குறைபாட்டை போக்கிக் கொள்ள அந்த உறுப்பினாலேயே செய்யக்கூடிய புண்ணிய காரியங்கள் உள்ளன. குப்பைத் தொட்டியான மனதைச் சுத்தம் பண்ண, அந்த மனதாலேயே தியானம் செய்ய முடிகிறது. கண்டதைப் பேசுகிற நாக்காலேயே இறைவன் திருநாமத்தைச் சொல்ல முடிகிறது.

459. வேறே ஒன்றும் தெரியாவிட்டாலும் இறைவன் என்ற, ஒருத்தனுக்குப் பயந்து தர்ம நியாயமாக நடக்க வேண்டும். பெரியவர்கள், முன்னோர்கள் காட்டிய வழியில் போக வேண்டும்.

460. உடல் நலம், சுத்தத்திற்கான சுகாதார நெறிகள், மருத்துவ சம்பந்தமான விஷயங்கள், மன தத்துவ ரீதியான விஷயங்கள், இந்தக் கால விஞ்ஞானத்திற்கேற்ற விஷயங்கள், நீதி நெறி, அன்பு முதலானவற்றின் மீதான செய்திகள் எல்லாமே நம் ஆசாரங்களில் வந்து விடுகின்றன. இதை அத்தனையையும் ஆத்ம சம்பந்தமாக உயர்த்திக் கொள்வது தான் அதன் சிறப்பு.

461. நல்ல எண்ணங்களில் எல்லாம் தலை சிறந்தது அன்புதான் இந்த அன்பை அனைத்து உயிரினங்களிடமும் செலுத்த வேண்டும்.

462. கர்மா என்றாலும் பக்தி என்றாலும் ஞானம், யோகம் என்று எந்தப் பெயரைச் சொன்னாலும், பயிற்சி மார்க்கங்கள் எல்லாம் மனதைக் கட்டுப்படுத்துகிற ஒரே இலட்சியத்திற்காக ஏற்பட்டதுதான்.

463. ஒரு உணவுப் பொருளைத் தள்ளுவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, அதிலே துன்பம் இருக்கக் கூடாது. இரண்டு, அது நமது சித்தத்தைக் கொடுக்கக்கூடாது.

464. வைத்திய சாத்திரம், தர்ம சாத்திரம் இரண்டின் பிரகாரமும் அரை வயிற்றுக்குத்தான் சாப்பிட வேண்டும். கால் வயிற்றுக்குத் தண்ணீர் குடிக்க வேண்டும். மற்ற கால் வயிறு வாயுவுக்கு விட்டுவிட வேண்டும்.

465. பசி என்பது வியாதி மாதிரி. வியாதிக்கு மருந்து அளவுப்படிதானே சாப்பிடுவோம்? கொஞ்சங்கூட அதிகம் சாப்பிட மாட்டோ மல்லவா? அதே மாதிரி பசி என்கிற வியாதிக்கும் சிகிச்சையாக, மருந்து மாதிரி உணவு உட்கொள்ள வேண்டும்.

466. ருசிக்காகச் சாப்பிடும் போதுதான் அளவுக்கதிகமான உணவு ஆகிறது. ''இறைவன் பசி என்று ஒன்றை வைத்துவிட்டான். அதைத் தீர்க்கத்தான் சாப்பிட்டுத் தொலைக்க வேண்டியிருக்கிறது'' என்பதற்காகவே சாப்பிடும் போது அளவு மீற மாட்டோம்.

467. உணவுப் பொருள் தூய்மையும், சமைக்கும் போது இறைவன் நினைப்பால் உண்டான தூய்மையும் சேர்ந்த ஆகாரத்தை இறைவனுக்குப் படைத்து அதை இன்னமும் சுத்தமானதாக்க வேண்டும்.

468. (உணவை) இறைவனுக்கு காட்டிவிட்டுச் சாப்பிட வேண்டும் என்பது முக்கியம். வேறே மூர்த்தி, விக்கிரகம் இல்லாவிட்டாலும் கண்கண்ட பகவானாயிருக்கிற சூரியனுக்காவது நைவேத்தியம் செய்ய வேண்டும்.

469. உண்ணா நோன்புகளால் உடலுக்கு ஏற்படுகிற சிரமங்களைச் சிரமமாகத் தெரியாமலே பழகிக் கொள்கிறோமென்றால் அப்போது உடலையே பிரதானமாக மதித்து அதன் சௌகரியங்களையே கவனிக்கும் இச்சையை விடுகிறோம் என்று தானே அர்த்தம்?

470. ''பசி எடுத்தாலும் பட்டினி கிடந்து பழகு; வம்பும் வீணும் பேசுவதில் சுகமிருந்தாலும் மௌனத்தைக் கடைப்பிடி. கண்ணை இழுத்துக் கொண்டு போனாலும் தூங்குவதில்லை என்று இரவு முழுதும் விழித்துக் கொண்டு ஈசுவர சம்பந்தமாக எதாவது பண்ணிக் கொண்டிரு. இப்படியெல்லாம் பழகப்பழக உடல் இச்சை புத்தி போகும் சரீரம் எப்படியானாலும் சித்தம் பரமாத்மாவிடம் நிற்கும்'' என்றுதான் சாத்திரங்கள் விரதம் உபவாசங்களை விதித்திருக்கின்றன.

471. உடல் உறுப்புகளில் இருதயத்தையும் நுரையீரலையும் கொஞ்சம் கூட ஓய்வு கொடுத்து வைக்க முடியாது. வயிற்றுக்குக்

கொடுக்க முடியும், கொடுக்கவும் வேண்டும்; ஏனென்றால் அரைத்துக் கரைத்து ரொம்பவும் உழைப்பது அதுதான்.

472. சாப்பிடுகிற நாட்களிலும் இறைவனைத் தியானம் பண்ணுங்கள், உண்ணாநோன்பு. இருக்கும் நாட்களிலும் சாப்பிடாமலிருந்தும் தியானம் பண்ணிப்பாருங்கள்; தனக்கே வித்தியாசம் தெரியும்; அந்த லாபத்திற்காக இந்த நஷ்டத்தைப் படலாம் என்பதை தெரிந்து கொள்வீர்கள்.

473. ''இப்போது இது உயர்ந்த ருசி என்று அதிகமாக சாப்பிட்டாலும் சாப்பிடுகிற இந்த ஐந்து, பத்து நிமிடங்களுக்கு அப்புறம் நாக்கில் நிற்கிறதா என்ன? இது என்ன நிரந்தரமாக வயிற்றில் இருந்து கொண்டு மறுபடியும் பசிக்காமலே பண்ணப் போகிறதா என்ன?'' என்று நம்மை நாமே கேட்டுக் கொண்டு கட்டுப்பாடு பண்ணிக் கொள்ள வேண்டும்.

474. ''வயிற்றைக் கட்டி, வாயைக்கட்டி'' என்பதற்கு சாப்பாடு, பேச்சு இரண்டையும் கட்டுப்படுத்து. என்பதுதான் உட்பொருள். ஆனால் நாமோ நேர்மாறாக. அதிகமான வேலையைக் கொடுக்கிறோம்.

475. முதலில் ஆரம்பிக்கிற மௌனம் இறைவழிபாட்டிற்கு சாதனம். பிற்பாடு நிறைவு நிலையில், அந்த மௌனமே ''இறைவன் வேறாக இல்லை, அவனுக்குத் தனியாக வழிபாடு என்று பண்ணவேண்டியதில்லை'' என்ற இலட்சியமாக உண்மை ரூபத்தில் பிரகாசிக்கும்.

476. வாய் பேசவில்லை என்பது மட்டுமின்றி, கண் பார்க்க வில்லை. காது கேட்கவில்லை, எல்லாவற்றிக்கும் மேலாக மனதில் ஒரு எண்ணம் கூட எழும்பவில்லை, என்று ஆகிவிடுவதுதான் உண்மையான மௌன நிலையாகும்.

477. மிகப் பெரிய நல்வாழ்வு (welfare) என்பது தர்மம்தான்; அந்த தர்மம் தெய்வ பகதியாலும்', மதப்பற்றாலும்தான் மக்களிடையே நன்றாக வேர் விட்டுவளரும். இந்த ஆதாரக் கொள்கையின் மேல் வகுத்த தர்ம சாத்திரங்கள் நம் நாட்டுக்குச் செய்து வந்த உண்மையான நன்மையை, எந்த புது அரசியல் முறையும், கொள்கையும் உண்டாக்கித் தர முடியாது.

478. மனதைக் கட்டுப்படுத்த முயற்சி எடுக்காமல் விட்டுவிடாதே, வெளியிலே ஓடுகிற அதை ஒவ்வொரு தரமும் மறுபடி உன் வழிக்கு இழுத்துக் கொண்டு வரப்பார்; இப்படி விடா முயற்சியுடன் எதிர்த்துப் போராடிக் கொண்டேயிருந்தால் அது ஒருநாள் அடங்கி பணிந்து போக ஆரம்பித்துவிடும்.

479. வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமான பொருள் இருந்தும் அதற்கு மேல் ஒருத்தன் பகவானிடம் பிராத்திக்கிறான் என்றால் அது பேராசைதான். எனவே அதை தவிர்ப்பது நன்று.

480. தனக்கென்று இல்லாமல் தனக்கு மேற்பட்டதை, உலக உபகாரமாக தர்மம் பண்ணுவதற்கே ஒரு பக்தன் பகவானிடம் பிராத்தனை பண்ணினால், அப்படிப்பட்ட பிராத்தனையையே பகவான் ஒப்புக் கொள்கிறார்.

481. ஒருத்தனுக்கு எளிமை வந்து மனதும் புலன்களும் வசமாகி, ஆசைப் பூர்த்திக்காக அலையாக அலைவதும் முடிந்து விட்டதென்றால் அப்புறம் தன்னளவில் வேறொன்றுமே வேண்டாம்.

482. நம்முடைய காமம், குரோதம் முதலிய கசப்பு எல்லாம், காய் பழமாக ஆவதுபோல, படிப்படியாத் துவர்த்து, புளித்து, அப்புறம் மதுரமாக ஆகவேண்டும். நமக்கு இந்தக் குறைகள் இருக்கிறதே என அழவேண்டாம். பகவானை நினைத்து பக்தியோடு இருந்து மக்களுக்கு நம்மாலான தொண்டைச் செய்து கொண்டிருந்தால் தன்னால் காலக்கிரமத்தில் இந்த குறைகள் எல்லாம் போய் பழுத்த பழமாக, அன்பு என்கிற ஒரே மதுரமாக ஆகிவிடுவோம்.

483. ஒரு குழந்தை இருப்பது போலவே இருந்து விட்டோமானால் நம்மை விட பாக்கிய சாலிகள் இல்லை, ஓயாமல் நம்மைப் பிய்த்துப் பிடுங்கும் சிந்தனைச் சுமை குழந்தைக்கு இல்லாததுதான் அதனுடைய ஆனந்தத்தின் ரகசியம்.

484. வேதங்கள் வகுத்துள்ள தர்மத்தில் இரண்டு மார்க்கங்கள், *பிரவிருத்தி மார்க்கம், நிவ்ருத்தி மார்க்கம்,* உலக வாழ்க்கையை நன்றாக தர்மமாக நடத்துவதற்கு ப்ரவிருத்தி மார்க்கம், அதை முடித்துவிட்டு பரமாத்மாவோடு ஐக்கியமாகி பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை பெறுவதற்கு நிவ்ருத்தி மார்க்கம்.

485. மனதை ஆத்மாவில் கரைப்பதற்கு முதற்படியாக அதைச் சுத்தப்படுத்த வேண்டும் அதற்கு உபாயமாக கடமை, நடைமுறை தவிர எதுவும் சாமானிய மக்களுக்கு இல்லை.

486. ஆசைதான் அழுக்கு. மனது உள்ள வரைக்கும் அழுக்கு இருக்கத்தான் செய்யும். ''இறைவன் வேறில்லை, நாம் வேறில்லை'' என்று அத்வைதமாக ஆகிற போதுதான் மனதும் இல்லை, ஆசையும் இல்லை.

487. *பரம சத்தியமான ஒன்றை, நிறைந்த அன்போடு சொல்லிவிட்டால் அப்படிப்பட்ட சொல் ஆயிரம் காலமானாலும் அழியாமல் நிற்கிறது.*

488. சரீரத்தை விடுகிற போது கொஞ்சம் கூட அழுகையில்லாமல் பேரானந்தமான பரமாத்மாவுடன் இரண்டறச் சேர்ந்து விடுகிற யோகமாக மரணத்தை ஆக்கிக் கொண்டு விட வேண்டும்.

489. ஒழுக்கத்திற்கு முதல் அங்கமாக என்ன வேண்டும்? பணிவு, அடக்கம், விநயம். *சகல நற்குணங்களுக்கும் அடிப்படையாக இருக்க வேண்டியது விநயம்தான்*.

490. உலகத்தில் கூட இரண்டு மனங்கள் ஒன்றானால் சண்டையில்லை. அதுபோல எல்லாம் ஈசுவரனாகி ஒன்றாகிவிட்டால் எந்த கிளர்ச்சியும் இல்லை, ஒரே சாந்திதான்.

491. உலகத்தில் உள்ள பொருளுக்காக எவ்வளவோ தியாகம் பண்ணுகிறோம். நமக்கு ஸ்திரமான ஆனந்தத்தைத் தரும் அத்வைத நிலையை அடைவதற்கு எந்தத் தியாகமும் செய்யலாம்.

492. காரணமே இல்லாது பக்தியைப் பண்ணிக் கொண்டு கடமையை சுத்தமாக நடத்திக் கொண்டிருந்தால் அதுவே மனதுக்கு நிறைவாகத்தான் இருக்கும்.

493. பகவான் கொடுத்திருக்கிற ஒரு செல்வம் நம் அறிவு என்பது. அதை நல்ல கல்வியாலும் ஆராய்ச்சியாலும் சாணை தீட்டி கூர்மையாக்கிக் கொண்டால் பரமாத்ம சத்தியம் சித்திக்கும்.

494 ''கட்டுப்படுவதில்தான் பெரிய சுதந்திரத்திற்கு வழி இருக்கிறது'', என்று இந்த நாளில் தெரிவதில்லை

495. ரொம்பவும் அல்பமான, ரொம்பவும் குறுகிய காலத்திற்கேயான இன்பம் தருகிற பாவ காரியங்களை விட்டு அதை விட உயர்ந்ததான நற்காரியங்களுக்குப் போக வேண்டும். தீராத சௌக்கியம், மாறாத நிறைந்த ஆனந்தம் என்பது உண்டென்றால் அது பரமாத்ம தத்துவத்தில் அதோடு அதுவாகக் கரைந்து எந்தக் காரியமும் இல்லாமல் கிடப்பதுதான்.

496. பணமும் வசதியும் எந்த தொழில்காரருக்கும் அதிகம் இருக்கக் கூடாது, இவற்றை விட முக்கியமானது இவை எவற்றை உத்தேசித்து ஏற்பட்டதுவோ, ஆனால் இவற்றால் எதை உண்மையில் பெறமுடியவில்லையோ, அந்த ஆத்ம திருப்திதான், மன நிறைவுதான் மனிதனுக்கு வேண்டியது.

497. ஆன்மீகமாக உயரவேண்டுமானால் அசௌகரியமும் கடும் உழைப்பும் நிச்சயமாக வேண்டும் அப்போதுதானே இவற்றையும் சௌகரியம் என்று நினைக்கின்ற மனப்பான்மை வரும்?

498. ''தான் இன்னொருவனைக் காட்டிலும் உயர்ந்தவன் என்று நினைக்கிறதே பாவம்'' என்று சாத்திரங்களில் சொல்லியிருக்கிறது மகான்களும் இப்படித்தான் நமக்கு வழிகாட்டியிருக்கின்றார்கள்.

499. நன்றாகப் பக்குவம் அடைந்த பிறகே – ஆகாரப் பண்டம் வெந்து பக்குவம் ஆகிற மாதிரி மனது முழுவேக்காடு ஆன பிற்பாடே – துறவறம், அதற்கு முந்திய நிலைகளாக இல்லறம் என்றே நம் சாத்திரங்கள் வைத்திருக்கின்றன.

500. தெய்வ சம்பந்தமாகவே வாழ்க்கை முழுவதையும் ஆக்கிக் கொள்வது என்று முடிவு செய்ய வேண்டும் அப்புறம் தான் துறவறம், எட்டாத உயரத்திற்குத் தாவி விழுந்து விட்டால் கை, கால் முறிந்து அப்புறம் எப்போதுமே ஏறமுடியாதபடி ஆகிவிடும்.

501. மனது தளராமல் நம்மால் முடிந்த முயற்சியை விடாமல் பண்ணிக் கொண்டே போனால் எத்தனை காலமானாலும் சரி; முறையான முன்னேற்றம் காண ஆரம்பித்து முடிவிலே லட்சியத்தை அடைந்து விடலாம். நம்பிக்கை முக்கியம்.

502. அழுக்கேறிப் போன ஒரு கண்ணாடி நிலைப்படாமல் ஆடிக் கொண்டிருக்கிற மாதிரி நம் மனது இருக்கிறது அதனால் இதில் ஞானத்திற்கான விஷயங்கள் பிரதிபலிக்காமல் இருக்கின்றன, கடமைகளைச் செய்து செய்து அழுக்கைத் துடைக்க வேண்டும். பக்தி பண்ணிப் பண்ணி அது ஆடுகிறதை நிறுத்தி நிலை கொள்ளச் செய்ய வேண்டும். நிலைக் (நிலையான) கண்ணாடி என்ற பெயர் பொருந்தும்படி செய்ய வேண்டும்.

503. இந்த மனித உடலால் பெறக் கூடிய இன்ப நுகர்ச்சிப் பொருள்களிலிருந்து பிரம்ம லோகத்தில் பெறக் கூடிய இன்ப நுகர்ச்சிப் பொருள்கள் வரை அநித்யமான யாவற்றிலும் ஏற்படும் வெறுப்புதான் வைராக்யம்.

504 விஷயங்களை வெறுத்து ஒதுக்கிவிட்டோமானால் மனதை அமைதி இன்ப வடிவமான ஆத்மா என்பதான, சாதனையின் இலட்சியத்தில் நிறுத்தலாம். அதாவது பல்வேறு விஷயங்களுக்காக ஆல்ாகப் பறந்து கொண்டு நாலா திசையிலும் ஒடுகிற மனதை அப்படி ஓடாமல் அடக்கி இலட்சியம் என்ற ஒன்றினிடம் நிலை நிறுத்தலாம்.

505 புலன்கள் செயல்படுவது கூட மனதின் ஏவலால்தான், மனதின் இஷ்டப் பூர்த்திக்கும் அதாவது ஆசை நிறைவேற்றத்துக்கும் தான் ஆனபடியால் மனதை அடியோடு அடக்கிப் போட்டுவிட்டாலே போதும், அத்தனை புலன் ஆட்டங்களும் ஓட்டங்களும் நின்று விடும்,

506. தனக்குள்ள புத்தி சக்தியைக் காட்டுவதில் உறுதியாக இருப்பதைவிட, காட்டாமல் இருப்பதில் உறுதியாயிருப்பதுதான் கடினம். ரொம்பவும் விநயம் (அடக்கம்) இருந்தால் தான் அது இயலும்.

507. சமாதி என்பதே கடைசியான லட்சிய நிலை. லட்சியமான ஒன்றில் அப்படியே ஒன்றிப் போயிருக்கிற நிலையே சமாதி. சாதனையின் முடிவில் பெறும் சித்தி நிலையே அது.

508. தன்னை பரமாத்மாவிலிருந்து பிரிந்த ஒரு தனி ஜீவனாக ''நான்'' போட்டுக் கொண்டு தன்னை மட்டுமே உயர்வாக நினைக்கும் எண்ணமே அகங்காரம். அது எப்போது நசிகிறதோ அப்போதுதான் தனி ஜீவனாக உள்ளநிலை ,ஜீவாத்மா என்னும் நிலை போய் ஆத்மாவை அறிந்து பரமாத்மாவாக இருக்க முடியும். இந்த அகங்கார நாசம் தான் சாதனையின் உச்சிக் கொம்பு.

509. *யாருக்கு எதெது நன்மை பண்ணுமோ அதைப் பிரியமாகச் சொல்வதுதான் சத்தியம்.*

510. சத்திய இலக்கணம் என்ன வென்றால் பிறத்தியார் ஒருவருடைய நலனே நோக்கமாகயிருக்க வேண்டும் அதற்காக வேறொருவருக்கு கெடுதல் பண்ணி இவர்களுக்கு நன்மை செய்வதாக இருக்கக் கூடாது. அதாவது எவருக்கும் கெடுதல் உண்டாக்காததாக இருக்க வேண்டும். சுயலாபம் சுயநலம் கலக்காமல் இருக்க வேண்டும்.

511. பெரும்பாலானவர்கள் சித்தமும் புலன்களும் ஓடுகிற வழியிலேயே ஓடிக் கொண்டு நியாயம், அநியாயம், தர்மம், அதர்மம், பார்க்காமல் நாம் சந்தோஷம் என்று நினைப்பதையே சரியானது என்றும் நினைத்து பலவிதமான தப்புகளை, பாவங்களைப் பண்ணுகிறோம்.

512. ''வாழ்க்கைத்தரம்'' என்பது வெளிப் பொருள்களின் பெருக்கத்தில் இல்லை. *தரமான வாழ்க்கை மனநிறைவோடு இருப்பது தான்.*

513. மனநிறைவு வெளிப் பொருள்களால் ஒருநாளும் கிடைக்காது. *நமக்கு அதுவேண்டும் இதுவேண்டும் என்று சதா அரிப்பு இருக்கிற வரையில் நாம் தரித்திரர்கள் தான்.*

514. மனதிற்கு அமைதி கிடைத்தால் மகிழ்ச்சியும் கூடவே வரும். இதற்காகத்தான் நாம் மனத்தைக் கட்டுப்படுத்துகிறோம்.

515 ஆரம்பத்தில் விஷம் போல இருந்துவிட்டு முடிவில் எது அமிருதமாகிறதோ அதுதான் உயர்ந்த அமைதியான இன்பம் – ஏனெனில் இதில் விஷம் தற்காலிகம், அமிருதம் நிரந்தரம்.

516. கிணற்றுக்குள் நீர் நிரம்பிய குடத்தை இழுக்கும் போது கனம் தெரிவதில்லை, அதே மாதிரி நம் துக்கங்களையெல்லாம் ஞானமாகிற தண்ணீரில் அமுக்கிவிட வேண்டும். அப்போது துக்கம் பரம லேசாகிவிடும்.

517. ஆசையினாலோ வெறுப்பினாலோ செய்கிற காரியங்கள்தான் ஒருவனைப் பாவத்தில் தள்ளுகின்றன. ஆசையும் வெறுப்பும் இல்லாமல் உலக நன்மைக்காக செய்கிற காரியங்கள் எத்தனை கொடுமையான செயலாகத் தோன்றினாலும் அவையெல்லாம் புண்ணியமானவைதான், இதுதான் கீதை தருகிற பதில்.

518. ஆசைக்கும் வெறுப்பதற்கும் காரணம் அகங்காரம். அகங்காரம் தொலைந்தால் எந்தக் காரியங்களிடையிலும் உயர்வு தாழ்வு தெரியாது. நாம் பாட்டுக்கு நம் கடமை இது என்ற உணர்ச்சியோடு ஆனந்தமாக (காரியங்களைச்) செய்து கொண்டிருப்போம், உலகம் இன்பமாக இருக்கும்.

519. இந்தச் சரீரம் போனால் இன்னொரு முறை சரீரம் வரக்கூடாது. அப்படிச் செய்து கொள்ள வேண்டும் கட்டுப்பாடு, ஒழுங்கு, பரமகருணை, தவம், வழிபாடு, யக்ஞம், தானம் எல்லாம் அதற்குத்தான்.

520. அறநெறிகளும் பக்தியும் ஆரம்ப சாதனங்கள். இவை ''எப்போதும் பயம்'' என்கிற நம்முடைய நிகழ்கால நிலையை ''எப்போதாவது பயம்'' என்று ஆக்கி இறுதியில் ''ஒரு போதும் பயமில்லை'' என்ற நிலைக்கு அழைத்துச் செல்லும்.



**ஆதி சங்கரர் வாக்கு**

*மரணம் தவிர்க்க முடியாதது என்பதைத் தெரிந்தும் பாவம் செய்வதை எவனும் விடுவதில்லை.*

*நீ உன்னுடைய பாப புண்ணிய பாரங்களை யெல்லாம் குருவிடம் அர்ப்பணம் செய்து பக்தி செய்தாயானால் விரைவில் உனக்குப் பிறவித்தளை நீங்கும்.*



# பொதுக் கருத்துகள்

521. அந்தக் காலம், இந்தக்காலம் என்று சொல்லிக் கொண்டு காலத்தை அனுசரித்து என்றைக்கும் நிலையான தர்மத்தை மாற்றுவது துளிக்கூட முறையே இல்லை.

522. நாடு நாடாக இருக்க வேண்டுமாயின், ஒரு நாட்டின் ஆட்சிக்குப் பொறுப்பேற்றுள்ள அரசாங்கம் மக்களின் உள்ளத்தை உயர்த்தவும் நிச்சயமாக உதவி புரியத்தான் வேண்டும்.

523. உண்மைகளையே உரிமையாக்கித் தரத்தான் தர்மம். தர்மத்தை அமல் செய்யத் தான் சட்டம்.

524. மனதில் அன்பும் சந்தோஷமும் இருக்கிறபோதுதான் புத்தி தெளிவாக இருக்கிறது. கோபம், ஆத்திரம், அழுகை, பொறாமை எல்லாம் உண்டாகிற போது புத்தி குழம்பிப் போகிறது.

525. வாழ்க்கையில் நல்ல நிலைக்கு வரவேண்டும் என்பதே பிறருக்கெல்லாம் உபகாரம் செய்வதற்காக தான்.

526. மிருகமாகத் தெரிகிற பசு, உயிரற்றதாகத் தெரிகிற பூமி, ஆகியவற்றில் உயிருள்ளதும் அன்பே உருவமானதுமான தாய்த் தத்துவத்தை கண்டுகொண்டு நம்முன்னோர்கள் ''கோமாதா'' ''பூமாதா'' என்றும் சொன்னார்கள்.

527. கறவை நின்றுபோன பிறகு பசுவைத் தீனி போட்டு பாதுகாத்து என்ன பயன்? என்கிற எண்ணத்தில் அதை இறைச்சிக் கூடத்திற்கு அனுப்பவதென்பது நம்மைப் பெற்ற தாய் வயதாகி வேலை செய்ய முடியாமல் ஆனவுடன் அவளைக் கொலை செய்தால் எப்படியோ அப்படிதான். ***கோ மாமிசம் தாய் மாமிசத்திற்கு சமானமே.***

528. தாயைப் பராமரிப்பது போலவும் தெய்வத்தாயை பூசிப்பது போலவும் பசுப்பாதுகாப்பை நாம் நினைக்க வேண்டும்.

529. ஆனந்தம் என்பதுதான் நம் ஆத்மாவின் உறுதியான நிலை குறிப்பே இல்லாமல் தன்னில் தானாக இருக்கிற சாந்த நிலையில் இருப்பதுதான் ஆனந்தம்.

530. அந்த ஆனந்தம் சூரிய ஒளிபோல சர்வ வியாபகமாகப் பரந்து இருப்பது. ஆனால் நமக்கு அது தெரியவில்லை. மரத்தடியில்

சூரிய வெளிச்சம் தெரியாத மாதிரி, மரத்தின் நிழலில் இருக்கிற நமக்கு இந்த ஆனந்தம் தெரியவில்லை.

531. உணவில் ஒரே ருசி மட்டும் இருந்தால் திகட்டி விடும். வாழ்க்கையிலும் இப்படியே ஏதோ ஓர் உணர்ச்சி மட்டும் இருந்தால் சீக்கிரம் திகட்டி விடும். அதனால்தான் அழுகை, சிரிப்பு, வெற்றி, தோல்வி, மான, அவமானம் எல்லாம் சேர்ந்து வருகின்றன.

532. தற்காலிக சத்தியமான உலகமே நித்ய சத்தியம் போல வேஷம் போட்டுக் கொண்டிருப்பதால் தான் நாம் இந்த உலகமே உண்மை என்னு மயங்கி இருக்கிறோம்.

533. உலகத்தில் இன்பங்களும் பொருள் நாட்டமும் தான் மக்களுக்கு பிடித்தமாயிருக்கின்றன. இந்த வழியே போய் மக்கள் பாவத்தையும் துக்கத்தையும் பெருக்கிக் கொள்ளும் போது தான் மகான்கள் அவர்களைக் காப்பாற்ற உபதேசம் பண்ணுகிறார்கள்.

534. இந்த உபதேசம் விளக்கெண்ணெயாய் தோன்றும். ஆனால் அது தான் உண்மையில் ‘விளக்கும்’ (தூய்மைப்படுத்தும்) எண்ணெய். மகான்களின் உபதேசம் மனதிலுள்ள அழுக்குகளைத் தேய்த்து, துலக்கி, விளக்கி வைத்து ஞான விளக்கை ஏற்றுகிறது.

535, கோமாதா, பூமாதா வேதமாதா என்பதாக பசு, பூமி, வேதம் மூன்றையும் அனைவருக்கும் தாயாராகச் சொல்லியிருக்கிறது.

536. ***பாரங்களிலேயே பெரிய பாரம் அகம்பாவம்தான்; தற்பெருமைதான்.*** அதை இறக்கினாலே நிரந்தர நிம்மதி.

537. நமது தலையை பிறர் இறக்கினால் அவமானம். நாமே இப்படி தலையை இறக்கினாலோ வெகுமானம். அடக்கம் என்னும் வெகுமதி.

538. வீரசூரர்களாக இருக்கும்போது நம்முடைய முன்னோர்கள் வில்லை வளைத்தார்கள். அடக்கமானவர்களாக எங்கே நல்லது இருந்தாலும் அதை எடுத்துக் கொள்ளும் போது வில்லாக வளைந்தார்கள். தாங்களே வில் மாதிரி வளைந்து பணிந்தார்கள்.

539. ஒருவன் தான் கற்ற வித்தை அவனோடு போய் விடாமல் அதை அவன் நாலு பேருக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பது விதி. விதி ஒரு புறம் இருக்க, அப்படி வித்தையைக் கற்றுக் கொண்டவனுக்கே. அதை உலகத்தில் தக்கவர்களுக்குக் கொடுத்துத் தான் பெற்ற இன்பம் அவர்களும் பெறச் செய்ய வேண்டுமென்று இருக்கும்.

540. ஒரு பசு இருந்தால் அது பல பேருக்குப் பால் கொடுக்கிறது. ஆனாலும் அத்தனை பேருக்கும் அது பால் சுரப்பதற்கு அதை ஊக்குவதாக அதனுடைய சொந்தக் கன்று ஒன்று அதன் மடியில் ஊட்டிப் பெறவேண்டியிருக்கிறது. அப்படித்தான் உபதேசம் என்கிற பால். அது தக்க தகுதிகள் பெற்ற எல்லாருக்குமானதாக இருந்தாலும் குறிப்பாக ஒரு சீடனை உத்தேசித்து குரு செய்வதாகவே இருக்கும்.

541. ஒருவனுக்குப் பணமும் பதவியும் உள்ள போதே அதனால் உண்டாகிற சிறிது சுகத்தோடு தன் பணம், பதவி பறிபோக்க கூடாது என்ற கவலை சுகத்தை விட அதிகமாக இருக்கிறது. இதனால்தான் உலகத்தில் எவனுமே தான் சந்தோஷமாக இருப்பதாகச் சொல்லக் காணோம்!

542. ஒவ்வொருவனும் தானே மகா புத்திசாலி, தானே மிகவும் யோக்கியன், தானே ரொம்ப அழகு என்று நினைத்துக் கொண்டிருப்பது போல அதிக துக்கமுள்ளவனும் தானே என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்.

543. நாம் இப்பூவுலகத்திற்கு வந்து விட்டோம். இனி, யாராக இருந்தாலும் போயாக வேண்டும்; இதுவரை இந்த உலகமானது அழுக்கை ஏற்றிக் கொள்வதற்கே இடமாக இருந்தது. இப்படியிருந்தது போதும். இனி இது அழுக்கை அலம்புகிற இடம் என்று ஆக்கிக் கொள்வோம்.

544. இறைவனின் அன்பைப் பெற நமக்குத் தகுதி வேண்டாமா? வேண்டும். மரத்திற்கும் மட்டைக்கும் உள்ள நியதி நமக்கும் உண்டு. உலக நன்மைக்காக அதை நாம் நடத்திக் காட்டுகிறபோதுதான் இறைவனின் அன்பைப் பெற உரிமை கோரலாம். மனிதனுக்காக உள்ள இந்த நியதிக்கே தர்மம் என்று பெயர்.

545. மனிதராகப் பிறந்து விட்டால் கஷ்டம், ஆபத்து எல்லாம் வரத்தான் செய்யும். அதை உணர்ந்து தான் புத்தாண்டில் முதலில் பூக்கும் வேப்பம் பூவை உண்கிறோம். வருடத் தொடக்கத்திலேயே கசப்பை ஏற்கிறோம். ஏறக்குறைய வருடமுடிவில் வரும் பொங்கல் பண்டிகையில் கரும்பை ருசிக்கிறோம். ஆரம்பத்திலேயே இனித்து விட்டால் முடிவில் கசந்து போகும்.

546. இந்த உலகில் நாம் யாருமே பாவியாக இருக்க விரும்புவதில்லை. ஆனால் பாப காரியமே அதிகமாகச் செய்கிறோம் நாம் எல்லோரும் புண்ணிய பயன் பெறத்தான் விரும்புகிறோம் ஆனால் புண்ணிய காரியங்கள் செய்வதில்லை.

547. ஆசை நிறைவேறிவிட்டால் அதோடு திருப்தி உண்டாகிறதா? இல்லை, அக்னியில் நெய்யை விட்டால் அது அணைந்தா போகிறது? மேலும் பெரிதாக வளர்கிறது. அப்படியே ஓர் ஆசை பூர்த்தியானவுடன் மனதில் இன்னோர் ஆசை பெரிதாக மூளுகிறது.

548. பாபத்திற்கு இரண்டு சக்திகள். ஒன்று, இன்று, இப்பொழுது நம்மை தவற்றில் ஈடுபடுத்துவது. இரண்டாவது, நாளைக்கும் இதே தவற்றை நாம் செய்யுமாறு தூண்டுவது.

549. கொஞ்ச நாழிகை சந்தோஷம் உண்டாக்குவதுதான் இன்பம் அல்லது காமம். அப்படிப் போய்விடாமல் ஒருமுறை வந்துவிட்டால் எந்தக் காலத்திலும் போகாமல் நிலைத்திருக்கிற பேரின்பமே மோட்சம் – வீடு இந்தப் பேரின்பத்தின் பெருமை தெரியாததால் தான் காமம் என்ற சிற்றின்பம் வேண்டுமென்று மனிதர்கள் நினைக்கிறார்கள்.

550. கொதிக்கிற மணலில் விட்ட நீர் உடனே சுவறிப்போவது போலத் தான் இன்பம் என்பது தன்னாலும் நிறைவின்றி வேறெதற்கும் சாதனமாகவும் இன்றி, தர்ம சிந்தனை, பொருள். மோட்சம் எல்லாவற்றையும் நாசம் செய்துவிட்டுத் தானும் நசித்துப் போகிறது.

551. நல்ல காரியங்கள், கெட்ட காரியங்கள் எல்லாவற்றிக்கும் ஒவ்வொரு சலனம், சப்தம் இருக்கிறது. இந்த சப்தத்தை உண்டாக்கி விட்டால் அந்த நல்லது அல்லது கெட்டது வந்துதான் ஆக வேண்டும் நல்ல காரியங்களுக்கான சப்தங்களை நாம் உண்டாக்க முடியுமானால் உலகத்தில் மக்களுக்கு நல்ல எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்கும். அப்படி எண்ணுவதற்கு அவர்களைத் தூண்டுகின்ற சக்தியைப் பெற்ற சப்தங்கள் தான் வேத மந்திரங்கள்.

552. எதற்கும் எதிர்ப்பு இருக்கத்தான் செய்யும். ஆகவே நல்லதுக்கும் கூட எதிர்ப்பு இருந்தால் தான் நம்குறை நிறை சரியாக வெளியாகும் நம்மைக் காத்துக் கொள்வதில் விழிப்பும் இருக்கும். ஆனால் எதிர்ப்பு என்ற பெயரில் இல்லாத கெடுதல்களைச் சொல்லி நல்லதை தூக்கில் போடக் கூடாது.

553. விஞ்ஞானத்தில் மிக முன்னேறிய தேசங்கள் நம் பாரத தேசத்தின் பக்கம் திரும்பி பயனடைய முயலும் போது நாமே நமது புராதன தர்மத்தை மறந்து வெறும் புலன் இன்பத்தில் இறங்கினால் அது ரொம்ப பரிதாபமாகும்.

554. நாகரிகமும் அதிக புத்தியும் படைத்த நாம் செய்யத்தகாத செயல்களில் நூதன கற்பனையுடன் விருத்தியடைந்து கொண்டே வருகிறோம் புத்தி எத்தனைக் கெத்தனை அதிகமோ அத்தனைக் கத்தனை பாபமும் அதிகமாயிருக்கிறது.

555. உலகுக்குச் செய்கிற நல்லதேதான் உண்மையில் நமக்கும் நல்லது. இதை நம்முடைய உள் மனமே அறிந்திருக்கிறது. அதனால் தான் தனக்கென்று செய்து கொள்கிற சௌகரியங்களில் கூட ஏற்படாத நிறைவு, பிறருக்காக அசௌகரியப்படும் போது ஏற்படுகிறது.

556. சொந்த ஆசை, வெறுப்பு இல்லாத போது அவனுக்கும் எந்த காரியம் செய்வதிலும் வெறுப்பு இராது. ஆசையும் வெறுப்பும் போய் விட்டால் எந்தக் காரியத்தையும் அன்போடு செய்து கொண்டு ஆனந்தமாக இருக்கலாம்.

557. சித்தம் சுத்தமாவதற்கு ஆகாரம் சுத்தமாயிருப்பது மிக அவசியம். பல இடங்களில் பலவிதமான பொருள்களைத் தின்பதே இன்றைய மனக் கோளாறுகளுக்கும் ஒழுக்கக் குறைவுகளுக்கும் முக்கியமானதொரு காரணம்.

558. சௌக்கியத்தை அனுபவிக்க அனுபவிக்க, ஞானம் வேண்டும் என்ற எண்ணம் குறைந்து கொண்டே போகிறது. இதனால்தான் லக்ஷ்மி இருக்கிற இடத்தில் சரஸ்வதி இருப்பதில்லை என்று பொதுவில் ஒரு வசனம் வந்து விட்டது.

559. மனது கட்டுப்படாதவர்களுக்கு அறிவை மட்டும் கொடுப்பது அனர்த்தத்தில் தான் முடியும்.

560. உணவு என்பது உடம்பை வளர்ப்பதற்கு மட்டுமல்ல, உள்ளத்தை வளர்த்துக் கொள்வதற்கும் உதவும்படியாக அதைப் பண்ணிக் கொள்ள வேண்டும் என்பதாலேயே சாத்திரங்களில் ஆகாரத்தைப் பற்றி அநேக வழிமுறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

561. எதைப்பற்றியுமே சொல்வது அதிகமாகி விட்டால் அப்புறம் செய்வது அந்த அளவுக்கு குறைந்து கொண்டுதான் வருகிறது.

562. சாதாரணமாகிய ஒரு இயக்கத்திற்கு அது சொல்கிற எதிர்ப்புக் காரியத்தை வைத்துத்தான் பொது மக்கள் ஆதரவு கிடைக்கிறது. இந்த அளவுக்கு அது விதிக்கிற விதிகளுக்கு ஆதரவு கிடைப்பதில்லை.

563. பொதுவாக நம்முடைய தப்பை உணர்ந்து நம்மைத் திருத்திக் கொள்வதைவிட, பிறர் தப்பை சொல்லி எதிர்ப்பதில் தான் நமக்கு ருசி.

564. எதிர்பார்க்கிற ஆசைப் பூர்த்திக்கு மட்டுமே ''திருப்தி'' என்பது பொருந்துகிறது. எதிர்பாராமல் கிடைப்பதை ''திருப்தி'' என்னாமல் ''ஆனந்தம்'' என்று மட்டுமே சொல்கிறோம்.

565. இறைவன் நாம் பண்ணிய பாவங்களை அனுபவிக்க உடம்பைக் கொடுத்து துன்பங்கள் என்ற கசையடிகளைக் கொடுக்கிறார்.

இந்த உடம்பு இதற்கு மேலே தாங்காது என்று அவர் நினைக்கிற கட்டத்தில் சாவை அனுப்பி அப்போதைக்குத் தூங்கப் பண்ணிவிடுகிறார். சிறிது நேரம் அவரிடம் லயிப்பு! அப்புறம் அதே உயிரைப் பிறப்பிக்கிறார்.

566. நல்ல மனதுக்கு அடையாளம் என்ன? அதில் அன்பு ஊறிக் கொண்டிருப்பதுதான்.

567. *நல்ல மனம் தான் தேவசக்தி; தீய மனம்தான் அசுரசக்தி.*

568. அழுக்கே இல்லாமல் பரம நிர்மலமாக அழகாக உள்ள தாமரை சேற்றில் பிறக்கிறது. எங்கே பிறந்தாலும் உயர்வாக, சிறந்ததாக உருவாகலாம்.

569. நெஞ்சில் கைவைத்துக் கொண்டு சொன்னால், நாமிருக்கும் நிலையில் நம்மில் யாரும் சாவை விரும்புவதில்லை.

570. பெரிய வேடிக்கை என்ன வென்றால் பெரிய ஞானி, பெரிய அஞ்ஞானி இரண்டு பேருக்கும் வித்தியாசமே கிடையாது.

571. ''தெய்வ அருளால் ஒருவனுக்குக் கிடைக்கக் கூடிய வாய்ப்புகள் மூன்று; ஒன்று, மனிதப்பிறவி கிடைப்பது, இரண்டு சத்தியத் தத்துவத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை பிறப்பது. மூன்று மகா உத்தமமான ஒரு குரு கிடைப்பது'' என்று ஆசார்யாள் ''விவேக சூடாமணி'' ஆரம்பத்தில் சொல்லியிருக்கிறார்.

572. இந்தியாவில்தான் மற்ற அத்தனை தேசங்களின் மகான்களைக் காட்டிலும், அதைவிட அதிகமாகவும், மகான்கள் தோன்றி ஆத்மானந்தத்தை அடைந்திருக்கிறார்கள் என்பதுதான் நம் பெருமை

573. யானை ஒன்றுக்குத்தான் வாயை மூடிக்கொண்டு தும்பிக்கை இருக்கிறது. *வாயைப் பொத்திக் கொள்வது அடக்கத்திற்கு அடையாளம்.*

574. எந்த தடையுமில்லாமல் ஒரு காரியம் நடந்தால் நல்லபடி நடந்தது என்ற திருப்தி உண்டாகிறது. ஆனாலும் அதைவிட திருப்தி, சந்தோஷம் எப்போது உண்டாகிறது என்றால் ஒரு தடை உண்டாகி அப்புறம் அது நீங்கி காரியம் நிறைவேறுகிற போது தான்.

575. இன்ன காரணத்திற்கு இன்ன விளைவு என்று ஒழுங்கு தப்பாமல் எத்தனையோ ஜோடி காரியங்கள் ஒன்றுக்கொன்று கை கொடுத்துப் பின்னிக் கொண்டு போவதால் தான் இந்த உலக வாழ்க்கை காலங்காலமாக தடம் புரளாமல் நடந்து கொண்டு போகிறது.

576. மனது எப்போதும் இன்பம் என்றும் நினைக்கும் விஷயங்களை நினைத்து நினைத்துதான் நிலை கொள்ளாமல் அலை

பாய்ந்துபடி இருக்கிறது. அதனால் தான் நமக்கு அமைதியான இன்பம் இன்னவென்று தெரியவில்லை.

577. கெட்டது என்பதில் கூட இல்லாத ஒரு பெரிய கெடுதல் இந்த நல்லதாகத் தோன்றுவதில் தான் இருக்கிறது. என்னவென்றால் நல்லது என்பதில் உண்டாகும் சுகம் நமக்குப் பிடித்தமானதாக இருப்பதால் அது மறுபடி மறுபடி கிடைக்க வேண்டும் என்ற அவா, பற்று உண்டாகி அதுவே மனதை எப்போதும் அலக்கழிக்கிறது.

578. புத்தியின் வேலை, செய்து பார்த்து உண்மையை உறுதி செய்து கொள்வது இல்லை இதன் வேலை தனக்கு இங்கு வேலை இல்லை'' என்று உறுதி செய்து கொள்வது தான்.

579. நாம் சத்தியம் உண்மை என்ற அர்த்தத்தில் நிஜம் என்ற வார்த்தையைச் சொல்கிறோம். அதற்கு அப்படி அர்த்தமில்லை ''தன்னிச்சையாக இருப்பது, தனக்கே சொந்தமானது'' என்பதுதான் அதற்குச் சரியான அர்த்தம்.

580. ''பக்தி சிரத்தை'' என்று சொல்வதே வழக்கம். அங்கே பக்தி என்று பிரியத்தையும் ''சிரத்தை'' என்று நம்பிக்கையையும் எடுத்துச் சொல்கிறோம். ஆனால் ஒன்றிடம் பிரியம் இருந்தால் தான் அதனிடம் நம்பிக்கை வரும். ஒன்று நம்பகமானதாக இருந்தால் தான் அதனிடம் பிரியம் வரும். இப்படி இரண்டும் பிரிக்க முடியாமல் இருப்பதால் ''பக்தியும் சிரத்தையும்'' ஒன்றே என்றாகி விடுகிறது.

581. பிறக்கிறபோதே அம்மாவிடம்தான் ஒட்டிக் கொள்கிறோம். அவள் உயிரில், அவள் உடம்பில், அவள் உணவில் நாம் உண்டாகிறோம். பிறந்த பிற்பாடும் ஆகாரம் தருவதிலிருந்து சகலத்திற்கும் அவள்தான் கதியாய் இருக்கிறாள்.

582. இல்லாததை இருப்பதாக காட்டி மாயம் பண்ணும் அம்பாள் ஒருநாள் பரம கருணையோடு அதை இல்லாததாகவே பண்ணி இருக்கிற ஒன்றினிலேயே நம்மை ஒன்றிக்கவும் செய்வாள்.

583. அம்பாள் கொடுத்த சக்தியால் சாப்பிடுகிறோம் என்று நினைக்கும் பொழுது கெட்ட பதார்த்தங்களை உள்ளே தள்ளத் தோன்றாது. அம்பாள்தான் நடக்கச் சக்தி தருகிறாள் என்ற ஞாபகம் இருக்கும் பொழுது ரேஸுக்கும், சினிமாவுக்கும் போகத் தோன்றாது. அவள் கொடுப்பது வாக்கு என்னும் பொழுது வீணாக அரட்டை பேசவோ திட்டவோ கெட்ட விஷயங்களை விவாதம் பண்ணவோ மாட்டோம்.

584. அறிவில்லாதவனுக்குப் பணத்தை கொடுத்தால் அனர்த்தமே உண்டாகும்.

585. ஆத்மாவால் பாப புண்ணியங்களை அனுபவிக்க முடியாது. ஆகையால் கர்மாவை அனுபவிக்க ஓர் உடம்பு வேண்டியிருக்கிறது.

586. கட்டுப்பாடு பண்ணுவதற்கும் ஒரு கட்டுப்பாடு வேண்டும் ரொம்பவும் கட்டுப்படுத்தினாலோ ரொம்பவும் அறுத்துக் கொண்டு ஓடத் தோன்றும்.

587 நம்முடைய சுக துக்கத்தைக் காட்டிலும் நாம் பிரியம் வைக்கிற ஒன்றின் சுக துக்கமே பெரிது, என்று நினைத்து அன்பு செய்ய ஆரம்பித்து விட்டால் அதுதான் மிகவும் உயர்வு.

588. பெரியோர்கள் ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு பொதுவான முறையை ஏற்படுத்தி இருக்கிறார்கள். அவரவர் போட்டிருக்கும் வழியில் செல்வதுதான் நல்லது. பத்திரமானது.

589. இயற்கையான குடும்பக்கட்டுப்பாட்டுக்கு சமைத்த உணவுக்குப் பதில் பழங்களைச் சாப்பிடுவது, சாத்திரப்படி விளக்கப்பட்ட நாட்களில் பிரம்மச்சரியத்தோடு இருப்பது, என்று தம்பதிகள் இருக்க ஆரம்பித்து விட்டால் குடும்பக் கட்டுப்பாடு செய்ய வேண்டிய அவசியமே இராது.

590. ஞானிக்கு ஆத்ம ஸ்வரூபத்தைத் தவிர வேறு எதுவுமே தெரிவதில்லை. ஒரே பரமாத்மாதான் இத்தனையாகவும் தெரிகிறது. என்று கண்டு கொண்டவன் அவன். வெளியிலே தெரிகிற தோற்றத்தை மாயை என்று தள்ளிவிட்டு எல்லாவற்றுக்கும் உள்ளேயிருக்கிற பரமாத்மா ஸ்வரூபத்தை மட்டுமே அனுபவிக்கிறவன் அவன்.

591. அடியோடு இல்லாத பொருள் அல்ல உலகம். ஞானம் வருகிற வரையில் உள்ள தோற்றம் அது. கனவு காண்கிற வரை கனவு மெய்யாகி இருந்து நாம் விழித்துக் கொண்ட பின் நசித்துப் போவது போல நாம் அஞ்ஞானத்தில் தூங்கிக் கொண்டிருக்கிற வரையில் உலகம் மெய்யாக இருந்து நாம் ஞான நிலையில் விழித்துக் கொண்டவுடன் மறைந்து போகிறது.

592. மாயை என்பது ஞானிக்கும் பூஜ்யம் (Zero) தான். ஆனால் ஞானம் வராத நிலையில் உள்ள ஜீவன் தன்னை ஒரு தனி எண்ணாக வைத்துக் கொண்டு பக்கத்தில் இந்தப் பூஜ்யத்தைச் சேர்த்துக் கொள்வதால் அஞ்ஞானிக்கு மாயையே பலவாக விரிந்து சத்தியப் பொருள்களாக, உலகமாக தோன்றுகிறது.

593. வெளியில் இருப்பது நம் வசத்தில் இருப்பதல்ல அது வந்தாலும் வரும், போனாலும் போகும். அதை நம் வசப்படுத்திக் கொண்டதாக நினைக்கும் போதே கைவிட்டுப் போகக் கூடும். நமக்கு

அந்நியமான வெளியிலிருந்து ஆனந்தத்தை நிரந்தரமாகச் சம்பாதித்துக் கொள்வது நடக்காத காரியம். அது சாந்தியைக் கெடுக்கிற முயற்சிதான்.

594. மனிதர்களில் எவராவது ஆனந்தத்தைத் தேடாமல் துக்கத்தைத் தேடிப் போகிறவர் உண்டா? ஆனாலும் அந்த ஆனந்தம் உள்ளே இருப்பதை அறிந்து சாந்தத்தில் அதை அனுபவிக்காமல் வெளியில் ஆனந்தத்தைத் தேடித் துரத்திக் கொண்டே போய் சாந்தத்தை ஓயாமல் கெடுத்துக் கொள்கிறார்கள்.

595. இவனுடைய (மனிதனுடைய) இயல்பான உள் ஆனந்தம் பெரிய கடல் மாதிரி இருக்கிறதென்றால் இவன் இப்பொழுது புறத்தில் தேடி ஓடுகிற பொருள்களிலிருந்து கிடைக்கிற ஆனந்தமெல்லாம் ஒரு துளி மாதிரிதான்.

596. வெளிப்பொருள் எதுவோ கிடைக்காததால் நமக்குக் குறை வந்து விட்டதாகத் துக்கப்படுவது சுத்தத் தப்பு. நமக்கு குறையே இல்லை நமக்குள் நாமே பூரணப் பொருள். நமக்கு அந்நியமாக வெளி என்றே ஒன்று இல்லை. வெளியிலே இருக்கிற அத்தனை ஆனந்தமும் நமக்குள்ளேயே அடக்கம்.

597 வளர்ச்சி என்று சொல்கிற மாறுதலுக்குள்ளே ஒரு அழிவு அல்லது சாவு இருக்கிறது. ஒரு ரூபம் அழிந்துதான் இன்னொன்றாக வளர்ந்து உருவாகிறது.

598 *அன்பு தருகிற ஆனந்தத்திற்குச் சமமாக எதுவும் இல்லை ஆனந்தத்தைத் தரும் அன்பே அழகாகி விடுகிறது*. திரும்ப திரும்ப ஆசையோடு பார்க்கத்தூண்டுகிறது.

599. தரிசனத்திற்கு ஆனந்த தாண்டவமூர்த்தி. தியானம் பண்ணுவதற்கு தட்சிணாமூர்த்தி.

600. தற்பெருமை பாராட்டக்கூடாது என்பது அடக்க குணத்தைத்தான் குறிக்கிறது. நாமும் அப்படி அடக்கமாக ஆரம்பித்து நல்லவர்களாக இருக்க முயற்சி பண்ணுவோம்.

*ஓம் சாந்தி! எல்லாவுயிர்களும் இன்புற்று வாழ்க!*



## சமர்ப்பணம்

ஊனத்தையே ஊன்று கோல்களாக்கி ஊனமுற்றோர்களுக்காக உன்னதப்பணி யாற்றிவரும் ஆயிக்குடி அமர்சேவா சங்கத்தின் உயிர்நாடிகளான தலைவர் திரு. இராம கிருஷ்ணன் செயலர் திரு. சங்கரராமன் ஆகியோர்களது தளராத தன்னலமற்ற தொண்டிற்கு இந்நூல் எளியதொரு சமர்ப்பணம்.

## உங்கள் கவனத்திற்கு!

இந்நூல் விற்பனைக்கு அன்று நீங்கள் அளிக்கும் நன்கொடை ரூ.11/- மட்டுமே (அடக்கத்தொகைக்கும் குறைவு) இத்தொகை ஆயிக்குடி அமர்சேவா சங்கத்தின் அரும்பணிகளுக்கான உங்கள் பங்கு.